

சென்ட்ரல்
இந்த இதழில் ஆரம்பம்
murphy radio
கல்கி
KALKI 8.8.1971 40 காசு

# விவா

இரு செயல் புரியும் ஆரோக்கிய பானம்

## பகலில் உடலுக்கு உரமூட்டும்...
## இரவில் நிம்மதியூட்டும்!

விவா பருகுங்கள்—சூடாகவோ, குளிர்ந்ததாகவோ. நீருடன் அல்லது பாலுடன் கலந்து. விவாவிலுள்ள ஆடைப்பால் செழுமையாக்கப்பட்டுள்ளது—மால்ட், கோதுமை மற்றும் புரதச் சத்துக்கள் சேர்க்கப்பட்டு. இது உங்கள் திசுக்களுக்கு உரமூட்டி, நரம்புகளுக்கு வீறூட்டி, தசைகளுக்கு வலுவூட்டுகின்றது.

காலையில் விவா பருகினால், பகல் முழுவதும் நீங்கள் உயிர்த்துடிப்புடன் விளங்குவீர்கள்! படுக்கும்போது அருந்தினால், இரவு முழுவதும் நிம்மதியுடன் உறங்குவீர்கள்!

விவா, எளிதில் ஜீரணமாகக்கூடிய உணவுப் பானம்—நோயாளிகளுக்கும் பிணியாறி வருபவர்களுக்கும் சஞ்சீவி!

**சுவையில் சிறந்தது—**
**விரைவில் கரைவது!**




Shilpi J.I. 2B-71 Tam.

இந்தியாவில் தயாரிப்போர்:
ஜகஜித் இண்டஸ்ட்ரீஸ் லிட்.

ஏகபோக விற்பனை ஏஜெண்டுகள்:
வோல்டாஸ் லிமிடெட்

# கல்கி

## பொருளடக்கம்



விரோதிகிருது, ஆடி 23 -- ஆகஸ்டு 8, 1971



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.


சந்தா விவரம்:

| | ஒருவருடம் | ஆறுமாதம் |
|---|---|---|
| இந்தியா | ரூ. 20-00 | ரூ. 10-00 |
| இலங்கை (இலங்கைநாணயம்) | ரூ. 21-00 | ரூ. 10-50 |
| இதர நாடுகள் | ரூ. 45-00 | ரூ. 22-50 |



"பழைமையான கரகரப்பான பற்பொடிகள் உங்கள் ஈறுகளுக்கும், பற்களுக்கும் தீங்கு இழைக்கக்கூடும்..!"

# கால்கேட் பற்பொடி உபயோகித்து உங்கள் பற்களையும், ஈறுகளையும் பாதுகாத்துக் கொள்ளுங்கள்! வாய் நாற்றத்தையும் அகற்றுங்கள்!

பழைமையான கரகரப்பான பற்பொடிகள் உங்கள் ஈறுகளைச் சேதப்படுத்தி, பல் எனுமலைச் சிதைக்கக்கூடும். கால்கேட் பற்பொடி மிகவும் மென்மையானது. அது உங்கள் ஈறுகளுக்கு இதமளிக்கும் போதே, அதில் கலந்துள்ள மெருகேற்றும் பொருள் பற்களின் மீது படிந்துள்ள கறைகளைப் போக்கி, பற்களைச் சுத்தமாக வெண்மை பளிச்சிடச் செய்கிறது. கால்கேட்டின் வளமான நுரை பல் இடுக்குகளில் ஊடுருவி வாய்நாற்றம் மற்றும் பற்சிதைவுக்குக் காரணமான கிருமிகளை அகற்றுகிறது. அதனால்தான் கால்கேட் பற்பொடி வாய் நாற்றத்தை உடனே நிறுத்தி, பற்சிதைவையும் எதிர்க்கிறது. அதன் குளுமையான இன்மணத்தையும் நீங்கள் பெரிதும் விரும்புவீர்கள்!

நவீன
பல் பராமரிப்பு முறைகளே **சிக்கனமாக**
இருக்கும்போது பழைமையான
பற்பொடிகளை ஏன் உபயோகிக்க வேண்டும்!

உங்கள் குடும்பத்திற்கு
எகானமி சைஸ் கால்கேட்
பற்பொடியை இன்றே வாங்குங்கள்!
ஒரு டப்பா மாதக்கணக்கில் வரும்!




...பூரணமான பல் பராமரிப்பிற்கு விஞ்ஞான முறையில் உருவாக்கப்பட்ட கால்கேட் டூத் ப்ரஷ் உபயோகியுங்கள்.



TP. G. 12 TM

தமிழ்த் திருநாடு தன்னைப் - பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா
— பாரதியார்



மலர் 31 □ இதழ் 2

# தமிழகமும் மதுவிலக்கும்

'தி. மு. க. சர்க்கார் மதுவிலக்கை ரத்துசெய்ய முடிவு செய்திருப்பது தமிழ் நாட்டில் எதிர் விளைவுகளை உண்டாக்குவதோடு நிற்காது; இது தேசம் முழுவதிலுமே மதுவிலக்கு இயக்கத்துக்கு எண்ணிமுடியாத தீமையை விளைவிக்கும். முப்பதாண்டுகளாக மதுவிலக்கை அநுசரித்து வந்த தமிழ்நாடு இப்போது கள்ளுக் கடைகளைத் திறந்தால் அது தேசிய நோக்கத்துக்கே பலமான தாக்குதலாகும்' என அகில இந்திய மதுவிலக்குக் குழு கூறுகிறது.

'இந்தியா முழுவதிலும் மதுவிலக்கு அமல் செய்யப்பட்டால் நாங்களும் மகிழ்ச்சியுடன் எங்கள் ராஜ்யத்தில் மதுவிலக்கை அமலாக்குவோம்' என்று தமிழக அரசாங்கத்தார் கூறி வருகிறார்கள். இதிலிருந்து மதுவிலக்கு என்பது நல்ல கொள்கை என்று தமிழ் நாட்டு அரசாங்கம் ஒப்புக் கொள்வதாகவே ஆகும். ஆயினும் பிற ராஜ்யங்களில் மதுவிலக்கு இல்லாததால் தமிழ் நாட்டிலும் கள்ளுக் கடைகளைத் திறக்க உத்தேசித்திருக்கிறார்கள். மற்றவர்கள் என்ன செய்தாலும், தான் நல்ல வழியில் செல்ல வேண்டும் என்ற கருத்தில் ஒரு சீர்திருத்தக் கொள்கையை முன்னோடியாகப் பின்பற்றுவதே நியாயம். மாறாக, மற்றவர்களைப் பார்த்து நல்ல சீர்திருத்தங்களைக் கைவிடுவது உசிதமல்ல.

இந்தியாவில் உள்ள மற்ற ராஜ்யங்களும் மதுவிலிருந்து கிடைக்கும் வருமானத்தைப் பொருட்படுத்தாமல் மதுவிலக்கை அநுஷ்டிக்கச் செய்வதே சீர்திருத்தம். இவ்விதம் மற்ற ராஜ்யங்கள் செய்வதற்குக் குஜராத்துடன் கூட, தமிழகமும் ஓர் உதாரணமாகத் திகழ வேண்டும். மாறாக முப்பதாண்டுகளாக அநுசரித்த நல்ல கொள்கையைக் கைவிடுவது தேசத்துக்கு வழிகாட்டுவதாகாது.

மதுவிலக்கை ரத்து செய்வதென்பது ஆயிரக்கணக்கில் கள்ளுக் கடைகளைத் திறந்துவைத்துத் தமிழ்மக்களின் பலவீனமான வர்க்கத்தினரைச் சபலத்துக்கு ஆட்படுத்தும் திட்டமேயாகும். இத்திட்டத்தைத் திரு கருணாநிதி கைவிடுமாறு செய்வதற்கு எனது இறுதி முயற்சியைச் செய்ய வேண்டும் என்றே ஜூலை 20ந் தேதி அவரைக் காண்பதற்காக அவரது வீட்டுக்குச் சென்றேன். அவருடன் வாதம் செய்வதற்காகச் செல்லவில்லை; தமிழ் நாட்டில் மதுவிலக்கு நீடிக்க வேண்டும் என்று பொதுமக்களின் சார்பில் மனப்பூர்வமாக வேண்டுகோள் விடுக்கவே சென்றேன். 'கடைசி நிமிஷத்தில் இந்த வேண்டுகோளை நான் விடுத்தேயாக வேண்டும், இல்லாவிடில் என் கடமையில் தவறியவனுவேன்' என்ற உணர்ச்சி என்னை உந்தித் தள்ளியதாலேயே சென்றேன். அவ்விதமே நான் சொல்ல வேண்டியதைச் சொல்லிவிட்டு, அதை அவரே சிந்தித்துப் பார்க்கட்டும் என்று விட்டு விட்டேன். நான் நம்பிக்கையுடன் திரும்பவில்லை. நமது கோரிக்கை நிறைவேறாதா என்ற பிரார்த்தனையுடனும் தாபத்துடனும் மனக் கலக்கத்துடனுமே திரும்பினேன்.

அரசாங்கத்தாரிடம் எவ்வித நெகிழ்ச்சியும் காணாததால் ஹைகோர்ட்டில் ஒரு ரிட் வழக்குத் தொடுக்க நடவடிக்கை எடுக்கச் செய்தேன். இன்னமும் ரத்துச் செய்யப்படாத 1937ம் வருடத்திய மதுவிலக்குச் சட்ட(X)த்தின் இரண்டாம் பிரிவுப்படி, சர்க்கார் ஓர் அறிக்கை பிறப்பித்த பின்னரே கள்ளுக் கடைகளை ஏலத்தில் விடவேண்டும். ஆனால் இப்போது அறிக்கை பிறப்பிக்காமலே சர்க்கார் ஏலத்துக்கு ஏற்பாடு செய்திருக்கிறார்கள். இது முற்றிலும் சட்ட விரோதமானது என்று எடுத்துக் காட்டி ரிட் மனு தாக்கல் செய்யப்பட்டிருக்கிறது. இதை ஹைகோர்ட் அநுமதித்துள்ளது. வழக்கை அநுமதித்துள்ள நீதிபதி, இவ்விஷயத்தின் முக்கியத்வம் காரணமாக எல்லா நீதிபதிகளையும்—அல்லது பல நீதிபதிகளை — கொண்ட பெஞ்சைப் பிரதம நீதிபதி நியமித்து விசாரணை செய்ய வேண்டும் என முடிவு செய்திருக்கிறார்.

சட்டரீதியான சிக்கல்களைத் தமிழக சர்க்கார் எப்படியாவது சமாளித்து விடக்கூடும். ஆனால் தமிழ் நாட்டில் ஆயிரக் கணக்கில் கள்ளுக் கடைகளைத் திறந்தால் நன்னெறிகளுக்கும் நல்ல பொருளாதாரத்துக்கும் ஏற்படும் தீமையைப் பற்றித் தமிழக சர்க்கார் மீண்டும் சிந்திக்க வேண்டும் என்று நானும் மதுவிலக்குக் குழுவினரும் கோருகிறோம்.

**(ராஜாஜி 'ஸ்வராஜ்யா'வில் எழுதியது.)**



# குடியின் கொடுமை

**மகாத்மா காந்தி**

உடல், அறிவு, பொருளாதாரம், தர்மம் அனைத்திலும் ஒருவனை நாசமாக்குவது குடிப் பழக்கம்.

குடியை ஒரு தீமை என்பதை விட, வியாதி என்றே சொல்ல வேண்டும். தங்களால் குடியை விட முடிந்தால் மிகவும் மகிழ்ச்சியுடன் அவ்வாறு செய்ய ஆசைப்படும் பலரை நான் அறிவேன். 'எங்களுக்கு இந்தச் சபலத்தைக் காட்டாவிட்டால் ஒழுங்காக இருப்போம்' என்பவர்களையும் அறிவேன்.

இந்த வியாதிக்காரர்கள் தங்கள் வியாதியை எதிர்த்துப் போராடுவதற்கு நாம் உதவி புரிய வேண்டும். சைத்தானின் சிருஷ்டி என்று மதுவைச் சொல்வதுண்டு. சைத்தான் மக்களை ஏமாற்றி வசியம் செய்யத் தொடங்கியபோது அவர்கள் முன் 'சிவப்புத் தண்ணீரை'க் காட்டினான் என்று இஸ்லாம் மதம் கூறுகிறது.

ஒழுங்காகவும், அமைதியாகவும் இருந்த இல்லங்களில் மது என்ற கொடுமை விளைவிக்கும் கேட்டைக் குடிகாரர்களின் மனைவியரே அறிவர்.

நான் பாட்டாளிகளில் ஒருவனாக என்னைக் கருதுகிறவன். எனவே மதுவினால் பாட்டாளிக் குடும்பங்களுக்கு ஏற்பட்டுள்ள நாசத்தை நன்கறிவேன். இவர்களுக்குக் கள் எளிதில் கிடைக்காவிட்டால், இவர்கள் அதைத் தேடிப் போய்க் குடிக்க மாட்டார்கள் என்று அறிவேன். ஏராளமான குடிகாரர்களே மதுவிலக்கு வேண்டும் என்று கோருவதைப் பிரத்தியட்சத்தில் பார்க்கிறோம்.

மது செய்யும் கொடுமைக்கு உதாரணமாக என் மூத்த மகனையே எடுத்துக் கொள்வோமே! அவனுக்கு அறிவும், தீரமும், தேசபக்தியும், தியாக உணர்வும் எவ்வளவோ இருந்த போதிலும், குடிப் பழக்கத்தால் பாழானான். சமூகம் அவனது சேவையை இழந்து விட்டது. பாத்திரத்தின் தகுதி பார்க்காமல் தவறாகத் தருமம் செய்யும் தயாள குணம் படைத்தவர்களை நம்பி வாழ்கிறான்.

போதை மருந்துகள், மது என்ற இரு கரங்களால் சைத்தான் தனது அடிமைகளை அடித்துப் பிரமையில் ஆழ்த்துகிறான்.

குடிப் பழக்கத்துக்கு நன்கு ஆட்பட்டு விட்டவர்களும் இது நல்ல பழக்கம் என்று நியாயம் பேசுவதில்லை. தங்களது பழக்கத்தைப் பற்றி அவர்கள் அவமான உணர்வே கொண்டுள்ளனர்.

அவர்களிடம் நீங்கள் குடிப் பழக்கத்தின் தீமையைப் பற்றிச் சொன்னால், ''எங்களால் இதை விட முடியவில்லை. நாங்கள் பாட்டாளிகள். எங்களுக்கு இது வேண்டியிருக்கிறது'' என்று எதையோ சொல்வார்கள். உங்களை ஏமாற்றுவதற்காகப் பல பொய்களைப் புனைந்து கூறுவார்கள். ஆனால் அவர்களும் குடிப் பழக்கம் பற்றி அவமானமே கொண்டுள்ளனர். 'நிர்ப்பந்தத்தின் பேரில் இந்தியாவில் குடியை நீக்கக் கூடாது; குடிக்க விரும்புகிறவர்களுக்கு அதற்கான சௌகரியம் இருக்க வேண்டும்' என்று சொல்வது குயுக்தி வாதம். இதைக் கேட்டு நீங்கள் ஏமாறக் கூடாது.

மக்கள் பாபம் புரிவதற்குச் சர்க்கார் சௌகரியம் செய்து தரக் கூடாது. திருட வேண்டும் என்பதில் ஊக்கம் உள்ளவர்களின் பொருட்டு, சர்க்காரே திருடுவதற்குச் சௌகரியம் செய்து தருமா, என்ன? திருடுவதைவிட — ஏன் விபசாரத்தைவிடவும் கூட — குடிப் பழக்கம் இழிவானது என்பது என் கொள்கை. அநேக சந்தர்ப்பங்களில் திருட்டு, விபசாரம் இரண்டையும் பெற்றெடுக்கும் தாயாகக் குடிப் பழக்கமே இருந்து விடுகிறது.

மது, போதை மருந்துகளிலிருந்து கிடைக்கும் சர்க்கார் வருமானம் மிகவும் இழிவானது.

ஒரு வரியில் சர்க்காருக்குக் கிடைக்கும் வருமானம் பொதுமக்கள் அந்த வரிக்காகக் கொடுக்கும் பணத்தைப் போல் பத்து மடங்கு நன்மை தருகின்ற பொதுப் பணிகளுக்குப் பயனாக வேண்டும். இந்த அடிப்படையில் வரி விதிப்பதே நியாயமான கொள்கை. வரி வருமானத்துக்காக மதுக் கடைகளை அனுமதிப்பதால், மக்கள் தங்களைத் தாமே தர்ம ரீதியிலும் அறிவிலும் உடல் வலுவிலும் பாழாக்கிக் கொள்கிறார்கள். இப்படிப் பாழாவதற்கு அவர்களிடமிருந்தே சர்க்கார் பணம் வசூலிக்கிறது. சக்தியில்லாதவர்கள் மீது இது மரணச் சுமையாக விழுகிறது.

மதுவிலக்கால் வரி வருமானம் குறையும் என்பது வெற்றுத் தோற்றமே. மதுவிலக்கை அமுல் செய்வதால் குடிகாரனாக இருந்தவன், அதாவது வரி தருபவன், நன்கு உழைத்து நிறையச் சம்பாதித்து நல்ல முறையில் செலவிட முடியும். எனவே, மதுவிலக்கால் தனி மனிதனுக்கு ஏற்படும் மகத்தான நன்மையுடன், பொருளாதாரத்திலும் கூடத் தேசத்துக்குக் கணிசமான லாபம் கிடைக்கிறது.



# கல்கிக்கு ராஜாஜியின் ஆசியுரை

குடிநீர் எவ்வாறு சுத்தமாக இருக்க வேண்டுமோ அவ்வாறே லக்ஷக்கணக்கில் மக்கள் படிக்கும் பத்திரிகைகளும் பரிசுத்தமாக இருக்க வேண்டும். இல்லாவிடில் எப்படி அசுத்தத் தண்ணீர் உடல்நலத்தைக் கெடுக்கிறதோ, அப்படிப் பத்திரிகைகளின் அசுத்தப் பண்பு மக்களின் குணத்தைக் கெடுத்துவிடும். கல்கி பத்திரிகை 30 ஆண்டாக தருமத்துக்கும் தேசத் தொண்டுக்கும் பணி ஆற்றி வந்து தமிழ்ப் பத்திரிகைகளின் முதல் வரிசையில் ஒன்ருக நிற்கிறது. 31வது ஆண்டு ஆரம்பத்தில் கல்கிக்கு என் பூரண வாழ்த்துக்கள். எவ்வித பயமும் இன்றி பாபங்களையும் குற்றங்களையும் எதிர்த்து, தேச பக்தி, தெய்வ பக்தி, நல்வாழ்க்கை மூன்றுக்கும் இத்தனை ஆண்டுகள் பணி செய்து வந்ததுபோல் இன்னும் பல்லாண்டு அது தமிழ் மக்களுக்காகப் பணி செய்ய வேண்டும்.

பாப எண்ணங்களையும் அவிவேகங்களையும் தூண்டும் கதைகளை விலக்கி, பரிசுத்த உள்ளங்களுக்குத் தைரியம் தரும் முறையில் கதைகள் இருக்க வேண்டும். பாப எண்ணங்களில் காணும் சிறு மகிழ்ச்சி நல்வாழ்க்கையை மெள்ள மெள்ளக் கெடுத்துவிடும். பிறகு மனிதனுடைய வாழ்க்கை நாசத்தில் முடியும். உள்ளத்தை மலமற்ற நிலையில் வைப்பதில் உதவும் பத்திரிகைகளே, பத்திரிகைகள். மற்றவை நம்மைக் கெடுக்கத்தான் உதவும். கல்கிக்கு என்னுடைய ஆசீர்வாதம். ஆண்டவன் அருள் இருந்தால் தருமமும் தேசபக்தியும் நல்வாழ்க்கையும் ஓங்கி வளரும்.

கொன்றை வேந்தன் செல்வன் அடியிணை
என்றும் ஏத்தித் தொழுவோம் யாமே.

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரி

# ராஜாஜியின் கருத்துக்கள்

பாகிஸ்தானத்தின் உள்நாட்டுப் போரால் இந்தியாவின் தலையில் சுமத்தப்பட்டுள்ள பாரத்தைப் பற்றிச் சிந்திக்க வேண்டியதில்லை என்று தில்லி மந்திரி சபை தீர்மானித்து விட்டது போலும்! எனவே சாஸனம் மக்களுக்கு அளித்துள்ள சொத்துரிமை, உத்தியோக உரிமை ஆகிய அடிப்படைச் சுதந்திரங்களைப் பறிப்பதற்குச் சட்ட ரீதியில் உபாயங்கள் கண்டுபிடிப்பதிலேயே தில்லி மந்திரி சபை வெகு தீவிரமாக ஈடுபட்டிருக்கிறது.

பத்திரிகைகளில் காணப்படும் அரசியல் வாதிகளின் கருத்துக்களைப் படிக்கும்போது, யதேச்சாதிகார ஆட்சிக்கு அடங்கிய வாழ்க்கைதான் இந்திய மக்களுக்கு விதிக்கப்பட்டிருக்கிறதோ எனத் தோன்றுகிறது. ஜனநாயக ஆட்சி முறையின் அஸ்திவாரக் கொள்கைகளே கைவிடப்படுவதைப் பார்க்க வேதனையாக உள்ளது. மக்கள் சுதந்திரமாக இயங்க முடியாதவாறு, பலவிதக் கட்டுப்பாடுகளை விதித்தபின் தேசம் முன்னேறுவது சாத்தியமல்ல. சுதந்திர உணர்ச்சி இன்றி எந்த மக்களும் செழிப்படைய முடியாது.

★

மக்களுக்கு சாஸனம் வழங்கிய அடிப்படைச் சுதந்திரங்களைக் காக்கும் கடைசி அரண் ஸுப்ரீம் கோர்ட்தான். மக்கட்சபை நிறைவேற்றவிருக்கும் 24-வது, 25-வது சாஸனத் திருத்தங்கள் சட்டவிரோதமானவை என்று ஸுப்ரீம் கோர்ட் தீர்ப்பு வழங்கி, தேசத்தைக் காக்கும் என்ற நம்பிக்கையிலேயே மக்கள் வாழ வேண்டும். நமது சுதந்திர ஸ்தாபகர்கள் சாஸனத்தில் பொறித்து வைத்த அடிப்படை உரிமைகளில் அரசாங்கம் புகுந்து அவற்றை மாற்ற முடியாது என்று சந்தேகத்துக்கு இடமின்றி உறுதிப்படுத்த வேண்டும்.

★

சாஸனத்தைத் திருத்துவதில் பார்லிமெண்டுக்கு ''**மீண்டும்** உரிமை பெற்றுத் தருவதற்காக'' இம்மசோதாக்கள் கொண்டு வரப்படுவதாகப் பத்திரிகைகளில் காண்கிறது. இது முற்றிலும் தவறாகும். இதனால், ஏற்கனவே சர்க்காருக்கு இப்படிப்பட்ட உரிமை இருந்ததாகவும், அதை மீளவும் உறுதிப்படுத்துவதாகவும் அர்த்தமாகும். இது தவறு. இப்போது பார்லிமெண்ட் விரும்பும் உரிமையைச் சாஸனம் அதற்கு ஒருகாலும் வழங்கவில்லை என்பதே ஸுப்ரீம் கோர்ட்டின் தீர்ப்பு.

சாஸனத்தின் அதிகாரபூர்வமான அர்த்தத்தைப் பற்றி ஸுப்ரீம் கோர்ட் தரும் விளக்கத்தை ஏற்பதில் எவ்வித சந்தேகமும் இருக்க இடம் தரலாகாது; சாஸனத்தின் அடிப்படைக் கருத்துக்களை அரசியல்வாதிகள் விளையாட்டுப் பொம்மை போல் கருத விடலாகாது — இதுவே தேசத்தின் விருப்பம்.

★

அரசியல் சாஸனத்தையும், அது உறுதி கூறும் அடிப்படை உரிமைகளையும் காப்பது நமது மனச்சாட்சியின் உத்தரவு என்று ஸ்ரீ மகாவீர் தியாகி கருதுவதாகப் பத்திரிகைகளில் படித்து மகிழ்கிறேன்.

★

அரசியல் சாஸனத்தின் நாலாவது பகுதியில் நாட்டு நிருவாகத்துக்கு ஜீவாதாரமாகக் கருதவேண்டிய அம்சங்கள் கூறப்பட்டுள்ளன. இவற்றை இந்திய யூனியன் சர்க்கார் மட்டுமின்றி ராஜ்ய சர்க்கார்கள் அனைத்தும் பின்பற்ற வேண்டும். இதில் 47-வது ஷரத்து வருமாறு :

> மக்களுடைய உணவின் சத்தை உயர்த்துவதையும், பொது ஆரோக்கியத்தை அபிவிருத்தி செய்வதையும் அரசாங்கம் தனது பிரதான கடமைகளாகக் கருத வேண்டும். குறிப்பாக, மருத்துவ காரணங்கள் இருந்தாலன்றி, ஆரோக்கியத்துக்குத் தீமை விளைவிக்கும் போதைப் பொருட்களையும், மது வகைகளையும், மருந்துகளையும் மக்கள் உபயோகிக்காதவாறு தடை செய்ய அரசாங்கம் முயல வேண்டும்.

இது அரசாங்கத்தின் 'ஜீவாதாரமான', 'பிரதானமான' கடமை என்பது 37-ம் ஷரத்திலிருந்தும், 47—ம் ஷரத்திலிருந்தும் தெரிகிறது. சாஸனத்துக்குத் தர வேண்டிய மரியாதையுடனும் விசுவாசத்துடனும் இதைத் தமிழக முதன் மந்திரியும், அவரது சர்க்காரும் படித்துப் பார்க்க வேணும்.

மக்களின் கெட்ட பழக்க வழக்கங்களைச் சீர்திருத்துவதற்குச் சர்க்காரால் முடியாமற் போகலாம். ஆயினும் குறைந்த பட்சம் அந்தப் பழக்கங்களைப் பெருக்கிச் சபலப்படுத்தாமலாவது இருக்க வேண்டும். இதற்கு மாறாக நடப்பது 47-வது ஷரத்தைத் திட்டவட்டமாக மீறுவதேயாகும். வருமானம் கிடைக்கிறது என்பதால் இவ்வாறு சாஸனத்தை மீறுவது நியாயமாகி விடாது.

---

## திருவள்ளுவர் திருக்கோயில்

சென்னை மயிலாப்பூரில் திருவள்ளுவருக்கென ஒரு நினைவுக் கோயில் இருந்து வருகிறது. இந்த நினைவாலயத்தில்தான் திருவள்ளுவர் வாழ்ந்து உலகப் பொதுமறையாகிய திருக்குறளை எழுதினார் என்பது வரலாறு. பல ஆண்டுகளுக்கு முன்பு நல்லறிஞர்களால் ஏற்படுத்தப் பெற்ற அத்திருக் கோயில் இப்பொழுது சீரழிந்தும், பாழடைந்தும் கிடப்பது வருந்தத் தக்கது. ஆகவே, இந்தத் திருவள்ளுவர் கோயிலை ஒரு புனித இடமாக மாற்றி அமைக்க ''நற்பணி மன்ற''த்தினர் திட்டமிட்டுள்ளனர். ராஜகோபுரத்துடன் கூடிய கோயிலாக நினைவு நிலயத்தைப் புதுப்பிப்பது முக்கியமான பணி. இத்திருப்பணிக்குப் பொருளுதவி அனுப்ப வேண்டிய முகவரி: திரு எஸ். கே. கலியாணசுந்தரம், அறங்காவல் குழுத் தலைவர், திருவள்ளுவர் கோயில், சென்னை—4.




## பதினெட்டாம் அத்தியாயம்

## நடுச்சாலை சம்பவம்

மி. குடபதிக்கு மறுபடியும் நினைவு வந்தபோது, தான் ஒரு மோட்டார் வண்டியின் பின்சீட்டில் படுத்திருப்பதை அறிந்தான். வண்டி வேகமாகப் போய்க் கொண்டிருந்தது. அவனுடைய தலையில் ஏதோ சுமைக் குண்டை வைத்தது போல் கனத்தது. வண்டி மோதிக் கீழே தள்ளியது அவனுக்கு நினைவு வந்தது. தலையில் நல்ல அடிபட்டிருக்க வேண்டும். அதனால்தான் அப்படி கனக்கிறது. இன்னும் முழங்காலிலும், முழங் கையிலும், தோளிலும் காயம்பட்ட வலியின் உணர்ச்சியும் உண்டாயிற்று. மிகவும் பிரயத்தனப்பட்டுச் சிறிது தலையைத் தூக்கி முன் சீட்டைக் கவனித்தான். நன்றாக இருட்டி இருந்தபோதிலும் வண்டி ஓட்டியது கார்க்கோடக் கவுண்டர்தான் என்பது தெரிந்தது. இந்த வண்டியேதான் தன்னை மோதிக் கீழே தள்ளியது. தான் கீழே விழப் போகும் தறுவாயில், டிரைவர் சீட்டில் இருப்பது கார்க்கோடக் கவுண்டர் போல் இருக்கிறதே என்று எண்ணியதும் நினைவுக்கு வந்தது.

தன்னைப் போலீஸார் கொண்டு போய் நடுச்சாலையில் விடப் போவதைத் தெரிந்து கொண்டுதான் கவுண்டர் பின்னால் தொடர்ந்து வந்திருக்க வேண்டும். வேண்டுமென்றுதான் காரைத் தன் மேல் மோதியிருக்க வேண்டும். ஆனால், இப்போது எங்கே தன்னைக் கொண்டு போகிறார்? — ஏதோ கொடிய நோக்கத்துடன்தான் இருக்க வேண்டும் என்பதில் சந்தேகமில்லை. தான் பிழைத்திருக்கும் விஷயம் அவருக்குத் தெரியுமா, தெரியாதா? செத்துப் போனதாக நினைத்துக் கொண்டு தன் உடலை எங்கேயாவது யாரும் கண்டு பிடிக்க முடியாத இடத்தில் கொண்டு போய்ப் போட்டுவிட எடுத்துப் போகிறாரா? — அல்லது உயிர் இருக்கிறதென்று தெரிந்துதான் வேறு ஏதாவது தீய நோக்கத்துடன் கொண்டு போகிறாரா? — ஒரு வேளை அவர் தன்னை உயிரோடேயே புதைத்துவிடக் கூடும் என்று எண்ணிய போது, மி. குடபதியின் தேகமாத்தியந்தம் ரோமங்கள் குத்திட்டு நின்றன. அந்த நினைப்பினாலேயே அவனுக்கு மூச்சுத் திணறிற்று.

இந்த ராட்சதனுடைய வசத்திலிருந்து எப்படியாவது தப்பித்துக் கொள்ள வேண்டும். தனக்காக இல்லாவிட்டாலும், செந்திருவுக்காகவும் பெரியண்ணனுக்காகவும் தப்பிப் பிழைக்க

வேண்டும். ஆனால், எப்படி? அதிவேகமாய்ப் போய்க் கொண்டிருக்கும் காரிலிருந்து எப்படி இறங்கித் தப்பிச் செல்வது ?

இவ்விதம் மகுடபதி யோசித்துக் கொண்டிருக்கும் போதே, வண்டியின் போக்கு மெதுவாயிற்று. என்ஜினிலிருந்து பட், பட் என்ற சத்தம் கேட்டது. இரண்டு மூன்று தடவை முக்கி முனகிவிட்டு கர்ர்ர் என்ற சத்தத்துடன் கார் நின்று விட்டது.

வண்டியை மறுபடியும் கிளப்புவதற்குக் கவுண்டர் ஆன மட்டும் முயற்சி செய்து பார்த்தார். ஒன்றும் பலிக்காமற் போகவே, வண்டியிலிருந்து கீழே இறங்கி, மகுடபதி படுத்திருந்த பின் சீட்டின் பக்கம் வந்து கதவைத் திறந்தார். மகுடபதி கண்களை இறுக மூடிக் கொண்டான். மூச்சுக்கூட மெதுவாக விட்டான். கவுண்டர் குனிந்து எதையோ எடுத்தார். அவர் எடுத்தது டார்ச் லைட் என்பதாக அடுத்த நிமிஷம் தன் முகத்தின் மேல் வீசிய ஒளியினால் மகுடபதி ஊகித்துக் கொண்டான். அப்போதும் அவன் கண்களைத் திறக்கவில்லை. கவுண்டர் டார்ச் லைட்டுடன் முன் பக்கம் போனார்.

சற்று நேரத்துக்கெல்லாம் மகுடபதி கண்ணை விழித்துப் பார்த்தான். அவன்



படுத்திருந்த பின் சீட்டின் கதவு திறந்திருந்தது. முன்னால் என்ஜின் மூடியைத் திறந்து வைத்துக் கொண்டு, கவுண்டர் கையில் டார்ச்சுடன் உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தார்.

சரி, தப்புவதற்கு இதுதான் சமயம் என்று மகுடபதி தீர்மானித்தான். சத்தம் செய்யாமல் கீழே இறங்கினான். சாலைக்குப் பக்கத்தில் மரங்களும் புதர்களும் அடர்ந்த காடு. நல்ல இருட்டு. உடம்பின் வலியையும் தலைக் கனத்தையும் சிறிதும் பொருட்படுத்தாமல் மகுடபதி மெள்ள மெள்ள நடந்து அந்தக் காட்டுக்குள் புகுந்தான். புகுந்த பிறகு திரும்பிக்கூடப் பார்க்காமல் போய்க் கொண்டேயிருந்தான். சுமார் அரை பர்லாங்கு தூரம் போன பிறகுதான் நின்றான்.

கவுண்டர் என்ஜினை ரிப்பேர் செய்துவிட்டுத் திரும்பி வந்து 'பார்க்கும்போது தன்னைக் காணாமல் எவ்வளவு ஏமாற்றமடைவார், எவ்வளவு கோபம் அவருக்கு வரும் என்று எண்ணினான். அப்போது கவுண்டரின் கோபக் குரல் போல், மோட்டார் கர்ர் டர்ர் என்ற கர்ஜனையுடன் கிளம்பும் சத்தம் கேட்டது. அந்தச் சத்தம் தூரத்தில் மறையும் வரையில் மகுடபதி பேசாமலிருந்தான். பிறகு மெள்ள மெள்ள நடந்து சாலைக்கு வந்து சேர்ந்தான்.



சாலையில் ஈ, காக்காய் கிடையாது. இருட்டோ கேட்க வேண்டியதில்லை. நடுக் காட்டின் தனிமையைக் காட்டிலும் இந்தச் சாலையின் தனிமை அதிக பயங்கரத்தை அளித்தது.

மகுடபதி சற்று நடந்து பார்த்தான் களைப்பினால் நடக்க முடியவில்லை. ஒரு மரத்தடியில் உட்கார்ந்து கொண்டான். ''கடவுளே! நீயே துணை!'' என்று மனத்துக்குள் எண்ணினான். இங்கே, இந்த மரத்தடியிலேயே கடவுள் நமக்கு மரணத்தை விளைவித்திருக்கிறாரா? இராது, ஒரு நாளும் இராது. இவ்விதம் அனாதையாக மரத்தடியில் சாய்வதற்காகவா பகவான் இத்தனை அபாயங்களிலிருந்து தன்னைக் காப்பாற்றுவித்தார்? இல்லை, தன் மூலமாகக் கடவுள் நிறைவேற்ற விரும்பும் காரியங்கள் இன்னும் இருக்கின்றன. முக்கியமாக, செந்திருவைக் கார்க்கோடக் கவுண்டரிடமிருந்து காப்பாற்றும் வேலையைக்

கடவுள் தனக்கு அளித்திருக்கிறார். அந்த வேலை நிறைவேறும் வரையில் தனக்குச் சாவு வராது. சீக்கிரத்தில் கடவுள் ஏதேனும் உதவி அனுப்பத்தான் செய்வார்.

ஒவ்வொரு நிமிஷமும் ஒவ்வொரு யுகமாக மகுடபதிக்குப் போய்க் கொண்டிருந்தது. இவ்வாறு அரை மணி நேரம் ஆகியிருக்கும். தூரத்தில் மாட்டு வண்டிகள் வரும் சத்தம் கேட்டது. அவற்றில் தொங்கிய விளக்குகள் வரிசையாக ஆடிக் கொண்டு வரும் அலங்காரக் காட்சியும் தென்பட்டது. அவை கோயமுத்தூருக்குச் சாமான் ஓட்டிச் செல்லும் பார வண்டிகளாய்த்தான் இருக்க வேண்டும். வண்டிகள் அருகில் வந்த போது மகுடபதி முன்ஜாக்கிரதையாக ஒரு மரத்தின் பின்னால் மறைந்துகொண்டான். கடைசி வண்டி கொஞ்சம் பின்னால் தங்கி வருவதைக் கவனித்தான். முன் வண்டிகள் எல்லாம் போன பிறகு, மறைவிலிருந்து வெளி வந்து, கடைசி வண்டியின் அருகில் வந்தான்.

அரைத் தூக்கமா யிருந்த வண்டிக்காரன் திடுக்கிட்டு, ''யாரப்பா, அது?'' என்றான். ''நீதானா அண்ணே!'' என்றான் மகுடபதி. அவன் வேங்கைப்பட்டிக்குப் பக்கத்து ஊரான காட்டுப் பாளையத்தைச் சேர்ந்தவன். செங்கோடக் கவுண்டன் என்று பெயர். மகுடபதியை இந்த இடத்தில் இந்தக் கோலத்தில் கண்டு அவன் அதிசயித்து வண்டியில் ஏறிக் கொள்ளச் சொன்னான். வண்டியில் தானிய மூட்டை ஏற்றியிருந்தது: மகுடபதி படுத்துக் கொள்ளச் சௌகரியமா யிருந்தது.

மகுடபதி காங்கிரஸ் தொண்டன் என்பது செங்கோடக் கவுண்டனுக்குத் தெரியும். கோயமுத்தூரில் நடந்த தடியடி கலாட்டாவைப் பற்றியும் அவன் கேள்விப்பட்டிருந்தான். ஆகவே, மகுடபதி தன்னைப் போலீஸார் இப்படித் தனிக் காட்டில் கொண்டு வந்து அடித்துப் போட்டு விட்டுப் போய்விட்டார்கள் என்று சொன்னதை அவன் உடனே நம்பினான். மகுடபதியினிடம் பூரண அனுதாபம் காட்டியதுடன், போலீஸ் இலாகாவைப் பலமாகத் திட்டவும் தொடங்கினான்.

''அண்ணே! சத்தம் போடாதே!'' என்றான் மகுடபதி.

''சத்தம் போட்டால் என்ன? எந்தப் பயல் என்னை என்ன செய்து விடுவான்? சிகப்புத் தலைப்பாகையைக் கண்டு, பயப்படுகிறவன் செங்கோடக் கவுண்டன் அல்ல. எந்தப் பயலாவது என் மேல் கையை வைக்க வந்தால் ஒரே குத்தாய்க் குத்திப் போட்டு விடுவேன்'' என்று செங்கோடக் கவுண்டன் மடியிலிருந்து கத்தியை எடுத்தான். மகுடபதி அவனுக்கு மகாத்மாவின் அஹிம்சையைப் பற்றிச் சொன்னதெல்லாம் ஒன்றும் பயன்படவில்லை. கடைசியாக, மகுடபதி, ''இன்னொரு காரணம் இருக்கிறது, அண்ணே! இந்தக் கலாட்டாவில் என்னை வேலை தீர்த்து விடுவதென்று கள்ளுக்கடைக் கவுண்டர் கங்கணம் கட்டியிருக்கிறார். என்னைத் தேடிக் கொண்டு ஒருவேளை எதிரே வந்தாலும் வருவார். நான் இந்த வண்டியிலிருக்கிறது தெரிந்தால்....''

''யார், கள்ளிப்பட்டிக் கவுண்டரா?'' என்று செங்கோடன் கேட்டபோது, அவனுடைய குரலில் கவலை தொனித்தது.

''ஆமாம்'' என்றான் மகுடபதி.

''ஐயையோ! அந்த ராட்சதன்கிட்டவா நீ விரோதம் பண்ணிக் கொண்டாய்?'' என்றான் செங்கோடக் கவுண்டன்.

போலீஸாரைப் பற்றி அவ்வளவு அலட்சியமாகப் பேசிய செங்கோடக் கவுண்டன், கள்ளிப்பட்டிக் கவுண்டர் என்ற பெயரைக் கேட்டதுமே நடுங்கியதைப் பார்த்து மகுடபதிக்கு ஆச்சரியமாயிருந்தது.

''கள்ளிப்பட்டிக் கவுண்டரை உனக்குத் தெரியுமா, அண்ணே!'' என்று கேட்டான்.

''ஏன் தெரியாது? நல்லாத் தெரியும். நானும் அவரும் ஒரே வீட்டிலே தான் பெண் கட்டினோம்.....''

''என்ன?''

''ஆமாம்; என் மச்சினியை அவர் இரண்டாந்தாரமாகக் கட்டி யிருந்தார்.''

''அப்படியா?''

''ஆனால் எங்களுக்குள்ளே வெகு நாளாய்ப் போக்குவரவு இல்லை. பாவாயி செத்துப் போன அப்புறம்...''

''யார் பாவாயி?''

''என் மச்சினிதான். அவளுக்கு ஒரு ஆண் பிள்ளைக் குழந்தை பிறந்தது. மூன்று வயதிருக்கும். பாவாயி செத்துப் போன சமயத்தில், அந்தப் பிள்ளையும் காணாமல் போய் விட்டது. பிள்ளையை நான்தான் ஏதோ பண்ணிப் பிட்டேன் என்று கள்ளிப்பட்டிக் கவுண்டருக்குச் சந்தேகம். ஐயையோ! என்னைப் படாத பாடு படுத்தி விட்டார். கொதிக்கிற எண்ணெயிலே கையை வைத்துச் சத்தியம் செய்த அப்புறம் தான் விட்டார். இதோ பார்!'' என்று செங்கோடன் கையைக் காட்டினான். கை வெந்து போய்த் தோல் உரிந்திருந்தது.







பெர்லின் சுவர் உருவாகி இந்த ஆகஸ்ட் மாதத்துடன் பத்து ஆண்டுகள் ஆகின்றன. கம்யூனிஸ வாழ்விலிருந்து தப்பிச் சுதந்திர ஜெர்மானியனாக வாழ விரும்பி ஏராளமானபேர் மேற்கு பெர்லினுக்குச் சென்றுவிடுவதைத் தடுக்க எழுந்தது சுவர். சுவர், தப்பிச் செல்பவரின் எண்ணிக்கையைக் குறைத்ததே ஒழிய சுதந்திர வாழ்வைத் தேர்ந்தெடுக்கும் விருப்பத்தை அதனால் கட்டுப்படுத்த முடியவில்லை. விளைவு - பெர்லின் சுவரையொட்டிப் பல தீர சாகசச் செயல்கள். வெற்றி யடைந்தவர் பலர்; பரிதாபமாக உயிர் துறந்தவர் பலர்.

அவ்வாறு சுதந்திர ஆர்வத்தால் உயிர் துறந்தவர்களுக்கென ஒரு நினைவுச் சின்னம் எழும்பியிருக்கிறது பெர்லினில் (படம் 2). ஒரு சமயம் அகதிகளாகத் தப்பிச் செல்வோரைத் தடுத்து நிறுத்த அமர்த்தப்பட்ட கிழக்குப் பெர்லின் சிப்பாயே சுதந்திர வாழ்வைத் தேடி வேலியைத் தாண்டி ஓடி வந்துவிட்டார்! (படம் 3). சுவரையொட்டியுள்ள வீடுகளின் ஜன்னல்களிலிருந்து மேற்கு பெர்லின் பக்கம் பலர் குதித்து விடுகிறார்கள் என்பதால் கம்யூனிஸ அரசு எல்லைப்புறத்து வீடுகளில் இருந்த ஜன்னல்களை யெல்லாம் செங்கல் அடுக்கி அடைத்து விட்டது! (படம் 1)

★

---

''பதினைந்து வருஷம் ஆச்சு! அப்போதிருந்த ராட்சதத் தனம் அந்த மனுஷனுக்கு இன்னும் போகவில்லை'' என்றான் செங்கோடன்.

மருடபதி இந்த விவரத்தைக் கேட்டு மிக்க ஆச்சரியமும் அருவருப்பும் அடைந்தான். கள்ளிப்பட்டிக் கவுண்டரிடம் தான் சிக்கிக் கொண்டால் என்ன பாடுபடுத்துவாரோ என்று எண்ணினான். அவனுடைய அடிவயிற்றை என்னமோ செய்தது.

இச்சமயத்தில் தூரத்தில் மோட்டார் வரும் சத்தம் கேட்டது. அதே ஹாரன் தான்!

அந்த ஹாரன் சத்தத்தைக் கேட்டதுமே வண்டிக்காரர்கள் மளமளவென்று வண்டிகளைத் திருப்பிச் சாலையில் ஓர் ஓரமாகக் கொண்டு போகத் தொடங்கினார்கள். வருகிறது யார் மோட்டார் என்று அந்த வண்டிக்காரர்களுக்குத் தெரியும் என்று தோன்றிற்று.

''நீ பயந்தாப்போலேயே ஆச்சு, தம்பி! கப்சிப்! பேசாமல் துணியைப் போர்த்துக் கொண்டு படுத்துக்கோ!'' என்றான் செங்கோடன்.

கட்டை வண்டிகளுக்கு எதிரே கொஞ்ச தூரத்திலேயே மோட்டார் நின்றுவிட்டது. அதில் இப்போது நாலு பேர் இருந்தார்கள். கள்ளிப்பட்டிக் கவுண்டர் கையில் துப்பாக்கியுடன் காரிலிருந்து இறங்கியபோது அவ்வளவு வண்டிக்காரர்களுக்கும் குலை நடுக்கம் எடுத்திருக்க வேண்டும். மருடபதிக்குக் கூட, ''என்ன விபரீதம் நடக்கப் போகிறதோ?'' என்று தத்தளிப்பா யிருந்தது.

கவுண்டர் துப்பாக்கியைப் பக்கத்திலிருந்த காட்டுப் பக்கமாய்த் திருப்பிச் சுட்டார்.

'டுடும்', 'டுடும்' என்று இரண்டு வேட்டுச் சத்தம் அந்த நள்ளிரவின் நிசப்தத்தைக் கிழித்துக் கொண்டு கேட்டது. (தொடரும்)

# அருமையான சுவை என்பது

## ஒரு விஷயம், சக்திமிக்க போஷாக்கு

# என்பது மற்றொரு முக்கியமான விஷயம்

அந்தப் போஷாக்கைப் பெறுவதற்குத்தான் எவ்வளவு கரகரப்பான, சுவைமிக்க வழி! பார்லே க்ளுகோ பிஸ்கெட்டுகளில் பால், கோதுமை மற்றும் சர்க்கரையின் நல்ல அம்சங்கள் எல்லாம் நிரம்பியுள்ளன — புரதங்களும் வைட்டமின்களும் அபரிமிதமாக அடங்கியுள்ளன.




**பார்லே க்ளுகோ** பிஸ்கெட்டுகள்

குழந்தைகளுக்கு விசேஷமாக சிறந்து விளங்குகின்றன

இந்தியாவின்
மிக அதிகமாக
விற்பனையாகும்
பிஸ்கெட்டுகள்

everest/79/PP Tam

# ஆசார்யர்களின் ஆக்ஞை

## ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராச்சாரிய சுவாமிகள்

ஸ்ரீ ஆதிசங்கர பகவத்பாதர்களின் பெயரில் வந்துள்ள பீடங்களில் இருக்கிற எங்களுக்கு அவர் இட்டுள்ள முக்கியமான ஆக்ஞை என்னவெனில், நாங்கள் எப்போதும் ஈசுவர தியானம் செய்ய வேண்டும், மற்றவர்களையும் தியானம் செய்யுமாறு பண்ண வேண்டும் என்பதே.

குழந்தைகளைப் பள்ளிக்கூடத்துக்கு அனுப்புகிறோம். அவர்கள் சரியாக நடக்காவிட்டால் உபாத்தியாயர் உபயோகமில்லை என்கிறோம். அப்படியே நீங்கள் சரியாக நடக்காவிட்டால் உங்களுக்கு 'குரு' என்று சொல்லப்படும் நான் உபயோகமில்லை என அர்த்தம்.

ஒருவனைக் கவனித்து நல்வழிப்படுத்துகிற பொறுப்பு இன்னொருத்தருக்கு இருக்கும் போது, அந்த ஒருவன் தப்புச் செய்தால், அந்தத் தப்பு அவனை நல்வழிப்படுத்தாத



வரையே சேரும். 'குடிகள் செய்யும் பாபம் அரசனைச் சேரும்; மனைவியின் பாபம் கணவனைச் சேரும்; சிஷ்யனின் பாபம் குருவைச் சேரும்' என்று நீதி சாஸ்திரம் சொல்கிறது. சாதாரணமாக குரு என்றால் ஒரு சில சிஷ்யர்கள் இருப்பார்கள். அவர்கள் செய்கிற சிறிதளவு பாபம் குருவிடம் சேரும். ஒருவர் ஜகத்குரு என்றால் அவரிடம் எத்தனை பாபம் வந்து சேரும்? உலகின் அத்தனை பாபமும் வந்து சேரும்.

பாபம் நீங்க ஒரே வழி பகவத் தியானம் தான். இதனால்தான் பகவத்பாதாள், ''மக்களைத் தியானத்தில் ஈடுபடுத்துங்கள். அவர்கள் தியானம் செய்யாவிட்டால் அவர்களுக்காகவும் சேர்த்து நீங்கள் தியானம் பண்ணுங்கள்'' என்று ஆக்ஞை செய்திருக்கிறார். அந்தக் கடமையைச் செய்ய என்னால் முடிந்த மட்டும் பிரயத்தனம் செய்து வருகிறேன். உங்கள் எல்லோருக்காகவும் தியானம் செய்ய முயலுகிறேன். ஆனால் நீங்களும், அவரவர்களே, எவ்வளவுக்கெவ்வளவு தியானம் செய்கிறீர்களோ அவ்வளவுக்கு என் கடமையின் பாரம் குறையும்.

மனசு சுத்தமாவதற்காக, பழைய பாப கர்மப் பலனைத் தாங்கிக் கொள்வதற்காக, புதிய பாவம் செய்யாமலிருப்பதற்காக எல்லோரும் முடிந்த மட்டும் தியானம் செய்ய வேண்டும். உறுதியான சங்கற்பம் இருந்தால் காலம் கிடைக்காமல் போகாது. அநாவசிய வம்பு, நியூஸ் பேப்பர் விமரிசனத்தில் செலவாகிற காலத்தை மட்டுப்படுத்தினால் நித்திய சிரேயஸைத் தரும் தியானத்துக்கு வேண்டிய அவகாசம் கிடைக்கும். தியானம் செய்வதே வாழ்க்கையின் முதலான காரியம் என்று கருத வேண்டும். ஐசுவரியம் இருந்தாலும் தரித்திரியம் வந்தாலும், கஷ்டம் வந்தாலும் சுகம் ஏற்பட்டாலும், ஆரோக்கியம் இருந்தாலும் வியாதி வந்தாலும் — எப்போதும் எத்தனை நாழிகை முடியுமோ அவ்வளவுக்கு தியானம் செய்ய வேண்டும்.

நாம் செய்வதோடு நம் பழக்கத்துக்கு உட்பட்டவர்களையும் தியானம் செய்யும்படி சொல்ல வேண்டும். செய்ய வில்லை என்று கோபித்துக் கொள்ளக் கூடாது. அன்போடு அவர்களுக்குப் படும்படி சொல்ல வேண்டும். அன்போடு சொன்னால் எப்படிப்பட்ட மனமும் கரையும்.

''தியானம் செய்யுங்கள்; மற்றவர்களைச் செய்யச் சொல்லுங்கள்'' என்று பகவத்பாதாள் எங்களுக்கு இட்ட ஆக்ஞையைத் தெரிவித்தேன். உங்களைத் தியானம் பண்ணுமாறு செய்கிறேனோ இல்லையோ, 'தியானம் செய்யுங்கள்' என்ற ஆதி ஆசாரியாள் ஆக்ஞையைத் தெரிவித்த அளவுக்காவது என் கடமையைச் செய்தவனாகிறேன். இதைச் சொல்லும் பாக்கியம் எனக்கு உங்களால் கிடைத்தது. ஸ்ரீ ஆசாரியாள் எதைச் சொல்ல ஆக்ஞை செய்தாரோ, அதைக் கேட்கும் பாக்கியம் உங்களுக்குக் கிடைத்திருக்கிறது. உங்களால் என் கடமையில் ஒரு பங்கையேனும் செய்த லாபத்தை அடைந்தேன். நீங்களும் ஆத்ம லாபத்துக்கான உபாயத்தை அடைந்தீர்கள். நமக்குள் பரஸ்பர லாபம் உண்டாயிற்று.

இதை நன்றாக மனதில் வாங்கிக் கொண்டு பூரண லாபம் பெறுங்கள். இந்த ஜன்மா முடிகிற போது, ''அப்பாடா, பிறவி எடுத்த பலனை அடைந்து விட்டோம்; இனி பயமில்லாமல் போய்ச் சேரலாம்'' என்று உறுதியும் திருப்தியும் பெறுகிற அளவுக்கு நல்ல மார்க்கத்தில் நாம் செல்லப் பரமேசுவரன் எல்லோருக்கும் பூரண அநுக்கிரகம் புரிவானாக !



# சுவை நிறைந்தவை... சக்தி செறிந்தவை!



# ஷாலிமார்

## குளுகோஸ் பிஸ்கட்டுகள்

ஆஹ்ஹா! ஷாலிமார் குளுகோஸ் பிஸ்கட்டுகளின் சிறப்பே சிறப்பு! ஷாலிமார் குளுகோஸ் பிஸ்கட்டுகளில் சக்தி ஊட்டுவதற்காக பால், கோதுமை மற்றும் குளுகோஸ் செறிந்துள்ளன. இவை அளிக்கும் தீஞ்சுவை தின்னத் தின்னத் திகட்டாது! ஆகையால்தான் சுவையிலும் சக்தியிலும் சிறந்து விளங்கும் ஷாலிமார் குளுகோஸ் பிஸ்கட்டுகளை அனைவரும் விரும்புகின்றனர். நீங்களும் ஒரு பாக்கெட் வாங்குங்கள், சுவைத்துப் பாருங்கள்; பிறருக்கும் தாருங்கள்; பேரின்பம் பெறுங்கள்!

சுவையில் சிறந்தவை









சுவைக்கென்றே பிறந்தவை ஷாலிமார் பிஸ்கட் வகை!

CMSB-21-202-Tam

# சென்ட்ரல்

## பி.வி.ஆர்


MADRAS CENTRAL
SOUTHERN RAILWAY
" யுவர் அட்டென்ஷன் ப்ளீஸ்!
தி பாம்பே மெயில் வில் பி
அரைவிங் ஆன் ப்ளாட்ஃபாரம் நம்பர்
த்ரீ இன் எ ஃப்யு மினிட்ஸ் "

## அத்தியாயம் 1

மங்களா ஒரு சொப்பனம் கண்டாள். சின்னஞ் சிறிய சம்பவமே ஆனாலும் அது ஒரு நீண்ட கதை போல் பிரமை தட்டியது.

விழக்கத்துக்கு ஒரு மணி நேரம் முன்பாகவே ரயில் ஒன்று வருகிறது. அதில் அவளும் ரேணுகாவும் ஏறிக் கொள்ளுகிறார்கள். உடனே புறப்பட்டு அசுர கதியில் கொஞ்ச தூரம் ஓடி, 'தடார்' என்ற சத்தத்தோடு நிற்கிறது. எட்டிப் பார்க்கிறாள். சின்னஞ் சிறு ஸ்டேஷனில் யாருமே இல்லை. இருவரும் இறங்குகிறார்கள். பார்க்கிறார்கள். என்ஜினையும் காணோம், ஸ்டேஷன் மாஸ்டர், ரயில் கார்டு முதலானவர்களையும் காணோம். ரேணு சிரிக்கிறாள். மங்களாவுக்கும் சேர்ந்து சிரிக்க வேண்டும் போல் இருக்கிறது. ஆனால் சிரிப்பு வரவில்லை.

மங்களா விழித்துக் கொண்டாள்.





தலை மாட்டில் இருந்த அலாரம் அடித்து ஓய்ந்திருந்தது. கண்ணைக் கசக்கிக்கொண்டே எழுந்தாள். காப்பியைக் குடித்த பிறகும் ருசி நாவில் மணப்பது போல், கனவின் பயங்கரமான இனிமை அவளுடைய மனத்தில் ஒரு ருசியாக மணத்துக் கொண்டிருந்தது. அவள் தினம் தினம் ஏதாவது ஒரு கனவு கண்டுகொண்டிருக்கிறாள். விதம் விதமான கனவுகள். வாழ்க்கைக்கு ஒட்டாத, அதனுடன் சம்பந்தப்பட முடியாத கனவுகள்.

எழுந்திருந்து 'விளக்கைப் போட்ட அவள், அலாரம் கடிகாரத்தில் மணியைப் பார்த்தாள். நாலே முக்கால். அப்பாவின் அறையிலிருந்து எடுத்து வைத்திருந்த கடிகாரத்தை மீண்டும் அவருடைய அறையிலேயே உடனடியாக வைத்தாக வேண்டும். இல்லாவிடில் அவருக்கு, எதையோ பறி கொடுத்து விட்ட ஆத்திரம் உண்டாகும். யார் கண்ணில் படுகிறார்களோ அவர்கள் மீது அவர் எரிந்து விழுவார். சாதாரணமாக அம்மா தான் அகப்பட்டுக் கொண்டு திண்டாடுவாள்.

அலாரம் கடிகாரத்தைக் கையில் எடுத்துக்கொண்டு அறையை விட்டு வெளியேறினுள் மங்களா. அவளுடைய கட்டிலுக்குச் சற்றுத் தள்ளி, அனு ஒரு சோபா — படுக்கையில் தூங்கிக் கொண்டிருந்தாள். என்னதான் எல்லாரும் மங்களாவை அழகி என்று வர்ணித்தாலும், அனுவின் உதட்டழகும், கண்ணின் வசீகரமும், கன்னக் கவ்வும் மூக்கின் வளைவும் தனக்கு இல்லையே என்று அவளுக்கு அங்கலாய்ப்பு, ஒரு கேவலாக உள்ளத்தில் எழும். ஆனல் அடுத்த கணமே, இருபத்திரண்டு வயதான அவள் பத்து வயதுப் பெண்ணுன அனுவைப் பார்த்து — அதுவும் தங்கையைப் பார்த்து — குறைப்பட்டுக் கொள்வது தப்பு என்று அவளுக்கே தோன்றும். தப்பு என்று தெரிந்தும் அவள் கேவல் என்னவோ நிற்கவேயில்லை. இந்த எண்ணம் அடிக்கடி அவளுள் எழுந்து வதைப்பதால்தானே என்னவோ, அனு மீது அவளுக்கு ஓர் அலாதிப் பிரியம் வளர்ந்து கொண்டே யிருந்தது.

அவளுடைய ஆருவது அறையை விட்டு ஐந்தாவது அறைக்கு வந்தாள். சங்கரும் விசுவும் தூங்கிக் கொண்டிருந்தார்கள். தன் அறை விளக்கின் வெளிச்சத்தில், விசு படுக்கையை விட்டு விலகித் தலையணையையும் மறந்து தூங்கிக் கொண்டிருப்பது தெரிந்தது. மங்களா தன்னுள்ளேயே சிரித்துக் கொண்டாள். விசுவை அந்தக் கோலத்தில் பார்க்கும் போதெல்லாம், மூன்று வருடங்களுக்கு முன்னுல் குடும்பம் முழுதும் பெங்களூருக்குப் போனபோது, ரயிலில் அவன் தன் 'பர்த்'திலிருந்து நழுவிக் கூடை மேல் விழுந்து, அதன் பின்னும் விழித்துக் கொள்ளாமல் தூங்கிக் கொண்டேயிருந்தது, நினைவுக்கு வரும். இப்போதும் வந்த அந்த நினைவோடு, அசையாமல் அழகாக உறங்கிக் கொண்டிருக்கும் சங்கரை ஓரக் கண்ணுல் கவனித்து விட்டு மேலே வேகமாக நடந்தாள்.

நாலாவது அறையில் மேஜை நாற்காலிகளே இருந்தன.

மூன்ருவது அறையில் நுழைவதற்கு முன்னே குறட்டை ஒலி கேட்டது. அப்பாவுக்குக் குறட்டை கொஞ்சம் அதிகம்தான். அதற்குக் காரணம் அவருடைய ஸ்தூலமான சரீரம்தான் என்று எப்போதோ எண்ணின எண்ணம் இன்னும் அவளுடைய மனத்தில் அழுந்தியிருந்தது. அப்பாவின் குறட்டையைக் கேட்கையில் அவளையும் மீறி ஒருவித அருவருப்பு உண்டாகும். ஆனல் அடுத்த விநாடியே அவள் மானசிகமாக அப்பாவிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டு, தன் மனத்தைச் சுத்தப்படுத்திக் கொள்வாள்.

அப்பா ஒரு பெரிய ஆலமரம். மூர்த்தியிலிருந்து சுஜா வரை எல்லோரும் அவருடைய கிளைகள். இத்தனை கிளைகளையும் அவர் எப்படி எப்படிக் கஷ்டப்பட்டு வளர்த்து, ஆளாக்கி உலகத்தில் நடமாட வைத்திருக்கிறர்! சாதாரண ஸ்டேஷன் மாஸ்டராக, தண்ணீர் இல்லாத, டாக்டர், மின்சாரம் போன்ற வசதிகள் இல்லாத வனந்திர ஸ்டேஷன்களில் உழைத்து உழைத்து முன்னேறி யிருக்கிறர். அவருடைய வெள்ளைப் பாண்ட்டையும் கோட்டையும் அவரே துவைத்து இஸ்திரி போட்டுக் கொண்ட நாட்கள் அவளுடைய நினைவில் என்றுமே மறையாத நாட்கள். வயிற்றைக் கட்டி, வாயைக் கட்டி, குழந்தைகளைப் படிக்க வைத்த பெற்றேர்களை அவள் கதைகளில் மட்டும் படிக்கவில்லை. அநுபவத்திலேயே பார்த்திருக்கிருள். ஆனல் இந்த அப்பாவுக்கு எந்தப் பிள்ளையும் பெண்ணும் எதையும் திருப்பிச் செய்ய மாட்டார்கள் என்று மங்களாவுக்குத் தோன்றியது. அவள், தான் சம்பாதிக்கும் இருநூற்று எழுபது ரூபாயில் பெரும் பகுதியை வீட்டுச் செலவுக்குத் தான் கொடுக்கிருள். இருந்தும், அவளுடைய மனச்சாட்சி உறுத்திக்கொண்டு தான் இருக்கிறது. சம்பளம் முழுதும் அவரிடம் கொடுத்துவிட்டு, அதன் பின் அல்லவா தனக்கு வேண்டியதை அவரிடமிருந்து பெற்றுக் கொண்டிருக்க வேண்டும்?

இந்த விஷயத்தில் அப்பாவும் சரி, அம்மாவும் சரி கொடுத்து வைக்காதவர்கள்தான். 'ஓகோ' என்று இருபத்திரண்டு வயதிலேயே ஒரு பெரிய பாங்கியில் அதிகாரியாகச் சேர்ந்த அண்ணு மூர்த்தி, பம்பாயில் இருந்த போதும் சரி, கல்கத்தாவில் இருந்த போதும் சரி, ஒரு ரூபாய் அப்பாவுக்கு என்று அனுப்பவில்லை. தரையைப் பார்க்காமலே நடந்த அவனுக்கு இரண்டு வருடங்களுக்குமுன் ஒரு பெரிய இடத்தில் கலியாணமாயிற்று. அந்தச் சமயத்தில் தான் பயிற்சி முடிந்து சென்னைக்கு மாற்றலாகி வந்திருந்தான். என்ன மாயமோ, மகிமையோ கலியாணமான மறு மாதமே மனைவி ஊரான பெங்களூருக்கே வேலை மாற்றம் உண்டாகியது. ஸ்டேஷன் சூப்பிரண்டெண்டான அப்பாவுடன், நரை விழுந்த அம்மாவுடன், கூடப் பிறந்த பத்துப் பேருடன் தன் தாம்பத்தியத்தை ஆரம்பிக்கவே அவனுக்குப் பிடிக்கவில்லை. அவன் தனியாகப் போன சில மாதங்களுக்குப்

பிறகுதான், அவனுடைய மாமஞர் முயற்சி செய்து வேலை மாற்றம் வாங்கிக் கொடுத்தார் என்ற விஷயம் வெளியே வந்தது. அம்மா 'நறுக் நறுக்'கென்று நாலு வார்த்தைகள் எழுதிப் போட்டாள் அவனுக்கு. ஆனல் அப்பா மௌனமாகவே இருந்தார். ஸ்டேஷன் மாஸ்டர், ஸ்டேஷன் சூப்பிரண்டென்ட் பதவியில் அவர் ஆயிரமாயிரம் பேர்களைப் பார்த்திருக்கிருர். விதம் விதமான குண மாற்றங்களை அநுபவரீதியில் கண்டிருக்கிருர். அவர் பிள்ளையை மறந்தார். அவ்வளவுதான். மறதியை யாராவது ஞாபகப்படுத்திஞல்கூட, அவர் வாய் திறந்து இரண்டு வார்த்தைகள் குறையாக, குற்றமாகப் பேச மாட்டார்.

மூர்த்திதான் அப்படிப் போனுன் என்ருல் மோகஞவது சென்னையிலேயே கிடைத்த வேலையை ஏற்றுக் கொண்டு வீட்டோடு இருந்து குடும்பத்துக்கு ஓர் ஆதரவாக இருந்திருக்கக் கூடாதா? இருபது வயதில் அவன் முதல் மாணவஞக 'ராங்க்' எடுத்து, ரஸாயனப் பொறி இயல் துறையில் தேறியதும், பிறர் கண்ணுக்கு அப்பா பெருமையில் பூரித்ததுதான் தெரிந்தது. ஆனல் உண்மையில் அவருடைய மனம் பெருமையிலா பூரித்தது? அவமானத்தில் அவர் நொந்து போனது யாருக்குத் தெரியும்?

ஒரு பெரிய கம்பெனியில், அப்பாவே யாரோ சில பெரிய மனிதர்களைப் பிடித்து எடுத்த எடுப்பில் எண்ணூறு ரூபாய் சம்பளத்தில் சென்னையிலேயே ஒரு வேலை வாங்கிக் கொடுத்தார். இந்த வயதில், இப்படிப்பட்ட படிப்பு படித்ததான், அப்பா வாங்குகிற சம்பளத்தை விட அதிகம் வாங்குகிறேம் என்ற எண்ணம் மோகனின் மனத்தில் விழுந்ததோ என்னமோ! அல்லது அவனுடன் கூடப் பிறந்த அகம்பாவமும் கர்வமும் ஆட்டி வைத்தனவோ, வீட்டில் அவன் ஒழுங்காகவே இருக்கவில்லை. ஸ்டேஷனில் ஒரு போர்ட்டர் மீதுகூட அதிகாரத்தைச் கடுசொற்களால் காட்டத் தெரியாத அப்பாவின் மீதே, அவன் அதிகாரம் செலுத்த முயன்ருன்.

ஆனல் நல்ல வேளையாக, சீக்கிரத்திலேயே அந்த ரணத்திலிருந்து அப்பாவுக்கு விடுதலை கிடைத்தது. பிள்ளை, தொழிற்சாலையிலும் அத்து மீறின அதிகாரத்தைப் பிரயோகிக்கிருன் என்று தெரிய வந்தது. அதன்பின் ஒரு நாள் காதும் காதும் வைத்தாற்போல் சீட்டும் கிழிந்தது. எந்தப் பெரிய மனிதருடைய சிபாரிசில் வேலை கிடைத்ததோ அவரே, அப்பாவுக்கு ஃபோனில் தம் வருத்தத்தைத் தெரிவித்தார்.

அதற்குப் பின் மோகன் பஞ்சாபுக்குச் சென்றதும், அங்கேயிருந்து அமெரிக்காவுக்குச் சென்றதும் தனிக் கதை. மொத்தத்தில், தலை எடுத்த இரண்டு பிள்ளைகளிஞலும் அப்பாவுக்குச் சுகமில்லை. ஆனல் இந்தச் சுகக் குறைவை அப்பா என்றுமே ஒரு சோகமாகவோ, ஏமாற்றமாகவோ காட்டிக் கொண்டதில்லை. அவருடைய இந்தத் தயாளமே மங்களாவின் மனத்தில் கண்ணீரை வரவழைக்கும். இப்பேர்ப்பட்ட அப்பா குறட்டை விட்டால் என்ன, இருக்க வேண்டிய இடத்தில் அலாரம் கடிகாரம் இல்லாமல் இருப்பதைக் கண்டு ஆத்திரப்பட்டால் என்ன? ஒரு தவறுமில்லை. அப்பா அவளைப் பொறுத்த வரையில் ஒரு மகான்தான்!

மூன்ருவது அறையில் அப்பாவின் தலைமாட்டில் மேஜையின் மேல் அலாரம் கடிகாரத்தை வைத்துவிட்டு, மங்களா பல்தேய்க்கச் சென்ருள். பம்பாய் மெயில் ஐந்தேகாலுக்கு வரவேண்டும். ரேணுகா இப்போது எப்படி இருக்கிருள் என்ற கேள்வி அவளுள் எழுந்தது. முந்தின இரவு படுப்பதற்குமுன் அவளைப் பற்றி இதே கேள்வி தோன்றி, அதன்பின் அவளை நினைத்தே உறங்க ஆரம்பித்திருக்கிருள். அதனுல்தானே என்னவோ, சொப்பனத்திலும் அவள் வந்தாள்.

பல் தேய்த்த கையுடன் முகத்தைச் சோப்பால் கழுவிக் கொண்டாள். சந்தன சோப்பின் மணம் அவளுடைய மனத்தில் என்றுமே ஒருவித கிளுகிளுப்பை உண்டுபண்ணும். இன்று அதைத் தேய்த்துக் கொள்ளுகையில், ஒரு கண்ணில் சிறிது பட்டுவிட்டது. ஜில்லென்ற தண்ணீரை மொண்டு மொண்டு கழுவியும், சோப்பின் எரிச்சல் நின்றுவிடவில்லை. துவாலையினல் முகத்தைத் துடைத்துவிட்டு, கண்ணை நன்ருகக் கசக்கிக் கொண்டாள்.

கண்ணுடிக்குமுன் நின்று தலையை வாரிக் கொண்ட போது, இடது கண், சோப்பின் சக்தியை அதிகமாகவே எடுத்துக் காட்டுவது போலச் சிவந்திருந்தது. இப்போது மங்களா அதை லட்சியம் செய்யவில்லை. ரயில் வர இன்னும் பத்து நிமிடங்கள்தான் இருக்கின்றன என்ற எண்ணம் மட்டுமே மேலோங்கி நின்றது.

அவளுடைய ஒல்லியான, அவ்வளவாகச் சதைப் பற்று இல்லாத, பொன்னிற உடலுக்கு ரத்தச் சிவப்பு நைலக்ஸ் எடுப்பாக இருப்பதை அவளே உணர்ந்தாள். சிவப்புச் சாந்து, சிவப்பு உதட்டுச் சாயம் முதலான அலங்காரங்கள் முடிந்தபின், மீண்டும் கண்ணுடியில்

## காலை வாரி விடாத காலணி!



உலகக் கால்பந்தாட்ட மன்னர் பீலி தம் பூட்ஸுக்குச் செலுத்தும் மரியாதை அனைவரையும் வியப்பில் ஆழ்த்தும். உலகக் கோப்பைப் பந்தயத்துக்கு வரும் பீலி தங்கும் அறைக்கு அடுத்த அறை அவரது பூட்ஸ் தயாரிப்பாளருக்குக் கொடுக்கப்படும். பந்தயத்தின்போது பூட்ஸ்கள் பழுதுபட்டால் அவரது பூட்ஸ் தயாரிப்பாளர் அவற்றை உடனே செப்பனிடக் காத்திருப்பார். பீலி பிரேஜிலின் புரொபஷனல் ஆட்டக்காரர். எந்த புரொபஷனல் ஆட்டக்காரரையும் விட அதிக சம்பளமும் ஆட்டத்துக்குப் பரிசுத் தொகையும் பெற்று வந்திருக்கிறார்!

பீலி ஜூலை பத்தொன்பதாம் தேதி இறுதியாக யுகோஸ்லேவியா - பிரேஜில் ஆட்டத்தின் முடிவில் கால்பந்தாட்டத்திலிருந்து ஓய்வு பெற்றார். நூற்றுக் கணக்கான ரசிகர்கள் அப்போது கண்ணீர் பெருக்கினர்!

(ஆதாரம்: ஆல்பிரட் பெர்னாண்டோ கட்டுரைகள்) - குண்டுமணி

தன்னைப் பார்த்துக் கொண்டாள். இடது கண்ணின் செம்மையும் புடவையின் நிறத்தோடு ஒட்டிப் பாங்காகத் தான் இருக்கிறது என்று எண்ணியது அவள் மனம்.

செருப்பை எடுத்துக் கொள்ள அவள் வராந்தாவுக்கு இரண்டாவது அறை வழியாகச் சென்றாள். அறையை அடைத்துக் குழந்தைகள் படுத்துக் கொண்டிருந்தார்கள்.

அம்மாவைப் பார்த்ததுமே, எழுப்பலாமா என்று தன்னையே கேட்டுக் கொண்டாள் மங்களா. ஆனால் அவள் ஒரு முடிவுக்கு வருவதற்குமுன், அம்மாவே எழுந்துவிட்டாள்.

''அம்மா! நான் போய் வருகிறேன்.''

''உம்!'' என்றாள் அம்மா.

கஜா, ராதா, பாபு, கலியாணம், ரவி எல்லாரும் தூங்கிக் கொண்டிருந்தார்கள். அந்தக் காட்சியைப் பார்த்த போது, மங்களாவுக்குக் குருவாயூர் போகிற வழியில் பார்த்த ஒரு பலா மரம் நினைவுக்கு வந்தது. சின்ன மரம் தான். ஆனால் சின்னதும் பெரிதுமாக எத்தனை காய்கள் எட்டிப் பிடிக்கக்கூடிய உயரத்தில் மொய்த்துக் கொண்டிருந்தன? அம்மாவும் ஒரு பலாமரம்போலத் தான். பதினொரு குழந்தைகளைப் பெற்ற அவள், ஒரு தடவைகூட இந்தப் பெரும் பாரத்தை நினைத்து நொந்து கொண்டதில்லை. அவளுக்கு இப்போது வயது மட்டும் ஐம்பத்திரண்டாக இல்லாமல் நாற்பத்து நாலோ, நாற்பத்து ஐந்தோ வாக இருந்தால் இன்னும் காய்த்துக் கொண்டேயிருப்பாள். கவலைப்படாமலும் இருப்பாள்.

ஐந்தாறு ஜதை செருப்புகளில், சிவப்பு வெல்வெட் செருப்பை அணிந்து கொண்ட மங்களா, காது 'ஸ்டட்'டை ஒரு தடவை தொட்டுப் பார்த்துக் கொண்டாள். கைவிரலுக்கு நிறபேதம் தெரியாது என்று தெரிந்தும், காதணிகள் சிவப்பு அணிகள்தானே என்று பார்த்தாள். அடுத்த விநாடியே, அது முந்தின நாள், க்ரீம் கலர்ப் புடவைக்கு ஏற்ற முத்துக்கள் இழைத்த 'ஸ்டட்' என்று நினைவுக்கு வந்தது. கைக் கடிகாரத்தைப் பார்த்தாள். ஐந்து பத்து ஆகியிருந்தது.

மாடிப்படி இறங்கினால் சென்ட்ரல் ஸ்டேஷன். மூன்றாவது பிளாட்பாரத்தில்தான் பம்பாய் மெயில் வழக்கமாக வந்து சேரும். மீண்டும் தன் அறைக்குச் சென்று, அலமாரியைத் திறந்து சிவப்பு 'ஸ்டட்'டுகளைத் தேடி எடுத்து, இருக்கிறதைக் கழற்றிப் போட்டுக் கொள்ளுவதற்குள், ரேணுகா அவளைப் பிளாட்பாரமெல்லாம் தேட ஆரம்பித்து விடுவாள். புடவையை மாற்றி விடலாமா? ஒரு கணம் யோசித்தாள். அதற்கும் நேரம் இல்லை என்று யோசனையைக் கைவிட்டாள்.

ஒருவித ஏமாற்றத்தோடு மாடிப்படியில் இறங்க ஆரம்பித்தாள்.

சென்ட்ரல் ஸ்டேஷன் மின்சாரக் கடிகாரங்கள் இரண்டுமே ஓடவில்லை. 'கடை மூடப்பட்டது' என்று அட்டை கட்டித் தொங்க விடுவது போல, ஒரு சதுரமான காகிதம் கடிகாரத்தின் நடுவில் ஒட்டப்பட்டிருந்தது. சாதாரணமாக, சென்ட்ரல் ஸ்டேஷன் பிளாட்பாரக் கடிகாரங்கள் இரண்டும் ஓய்வே எடுத்துக் கொள்ளா. அப்படி எடுத்துக் கொண்டாலும் அது ஒருசில மணி நேரங்களுக்குத்தான்.

பிளாட்பாரத்துக்குப் போகும் வழியில், பெட்டி மீதும், படுக்கை மீதும் உட்கார்ந்தும் படுத்தும் பிரயாணிகள் தூங்கிக் கொண்டிருந்தார்கள். ஒரு வட இந்திய யாத்திரிகர் கூட்டம், தன் சலவை செய்ய முடியாத அழுக்கில் தோய்ந்து உறங்கிக் கொண்டிருந்தது. வலதுபுறக் கோடியில், தாற்காலிகமாகச் சாமான்களை வைக்கும் அறையை ஒரு சிப்பந்தி திறந்து கொண்டிருந்தான். இடதுபுறத்து ஹிக்கின்பாதம்ஸ் புத்தக சாலை இன்னும் திறக்கப்படவில்லை. ஆனால் அதன் வலதுபுற ஓரத்

தில் தினசரிப் பத்திரிகைகள் விற்பனை யாகிக் கொண்டிருந்தன.

ரயில் நிற்பதற்குள் தாவி ஏறிச் சொல்லாமலே பெட்டியைத் தூக்கும் நீலச் சட்டைக்காரர்கள் சிவப்பு அங்க வஸ்திரத்தை இன்னும் தலையில் முண்டாசாகக் கட்டவில்லை.

மூன்றுவது பிளாட்பாரத்தில் அவள் கால் வைக்கவும் ஒலிபெருக்கி கதற ஆரம்பிக்கவும் சரியாக இருந்தது. ஆங்கிலத்தில் ஆரம்பித்த அறிவிப்பு தமிழில் அலறியது:

''பம்பாயிலிருந்து வரும் பாம்பே மெயில் இன்னும் சில நிமிடங்களில் மூன்ருவது பிளாட்பாரத்தில் வந்துசேரும்.''

ஹிந்தி மொழிபெயர்ப்பை அவள் உதாசீனம் செய்து கொண்டே நடக்கலானுள். ஏன் ஒலிபெருக்கியாளர், 'இருந்து', 'மூன்ருவது', 'வந்து' என்ற வார்த்தைகளில் 'து' எழுத்துக்கு அவ்வளவு முக்கியத்துவம் கொடுத்து அதைக் கெட்டிப்படுத்துகிருர் என்று புரியவில்லை. என்றுமே அவளுக்கு ரேடியோவில் தமிழ்ச் செய்திகளையும் அறிவிப்புக்களையும் கேட்கப் பிடிக்காது. ஜீவனற்ற குரலில் வார்த்தைகள் வறவறவென்றிருப்பதாகத் தோன்றும். சந்தோஷ சமாசாரமானுலும் சரி, துக்கச் செய்தியானுலும் சரி, அறிவிப்பவர் அதனை விட்டுத் தனித்து நிற்பதாகத் தோன்றும். ஒரு வேளை அப்படி நிற்க வேண்டியது அரசின் ஆணை என்றே, கடமை என்றே நினைக்கிருர்கள் என்று மங்களா எண்ணுவாள். ஆனல் சென்ட்ரல் ஸ்டேஷன் ஒலி பெருக்கியில் எப்போதுமே வார்த்தைகள் இயற்கையான பாணியில் வராது. கேட்பவர்களுடைய காதுகளில் குரல் மோதுகிறதே தவிர, ஒரு மனிதனுடைய குரல், கேட்பவர்களின் மனத்தைத் தொடுவதே இல்லை. இதற்குக் காரணம், கடமையின் அடிப்படையில், எட்டு மணி நேர வேலை என்ற திட்டத்தின் அடிப்படையில் எழுகிற குரல் என்பது தானே என்னமோ!

மங்களா நடந்தாள். எல்லா சிமென்ட் பெஞ்சிகளிலும் யார் யாரோ தூங்கிக் கொண்டிருந்தார்கள். துண்டைப் போட்டு, ரயில் பெட்டி ஸீட்டுகளையும் ஆசனங்களையும் விலை பேசும் ஊர் சுற்றிகளிலிருந்து, ஹோட்டல் அறைகளை வாடகைக்கு எடுத்துக் கொள்ள மனம் கூசும் கருமிகள் வரை எத்தனையோ பேர்.

மங்களா அலுத்துக் கொண்டாள். தினசரி வேலையில்—அதுவும் சென்ட்ரல் ஸ்டேஷன் விசாரணைக் காரியாலயத்தில் பணி ஆற்றும் நாட்களில் அவளுக்கு அலுத்துக் கொள்ளத்தான் நேரம் இருக்கும். அவசரம் அவசரமாய் வீட்டிலிருந்து ஓடி வந்த அவளை பம்பாய் மெயில் காக்க வைக்கிறது. உட்காருவதற்குக்கூட இடமில்லை. ஓட்டப் பந்தயத்துக்குத் தயாராக உட்காருகிறவர்களைப் போல், போர்ட்டர்கள் உட்கார்ந்திருக்கும் காட்சி வேறு கண்ணை உறுத்தி விட்டது. அவர்களுடைய அவலப் பிழைப்பை எண்ணி, கண் உறுத்தலை மறக்கலாம் என்ருல், பலபேர்களுடைய வாயிலிருந்து வந்த பீடியின் நாற்றம் அவளுடைய அலுப்பையும் வெறுப்பையும் அதிகமாக்கியது. இதெல்லாம் போதாவென்று காதையே கிழிப்பது போல, காங்க்ரீட் தளத்தில் இரும்புச் சக்கர டிராலிகள் ஓலமிட்டுக் கொண்டே அங்குமிங்குமாய் ஓடிக் கொண்டிருந்தன. யாராவது மந்திரியின் காதிலோ, எதிர்க் கட்சித் தலைவர்களின் காதிலோ இந்த டிராலிகளின் ரீங்காரம் தொடர்ந்து ஒரு மணி நேரம் இசைத்தால்தான் பிரயாணிகளுக்கு விமோசனம் பிறக்கும். டிராலிகளுக்கு ரப்பர் டயர் பொருத்துவார்கள்.

பல பிரயாணிகள், பல பெரிய தினசரிகளுக்குக் கடிதங்கள் எழுதியாகி விட்டது. டிராலியின் சக்கரங்கள் இன்னும் பதில் சொல்லவில்லை! ஒரு நாள் இல்லா விட்டால், ஒரு நாள், எல்லாப் பிளாட்பாரங்களிலும், தரையின் காங்க்ரீட் உடைந்து உதிர்ந்து, கற்கள் குத்தப் போகின்றன. அப்போதும் டிராலியைக் கவனிக்க மாட்டார்கள். புது காங்க்ரீட் தான் போட ஆரம்பிப்பார்கள்.





## சர்க்கார் நிறுவனமே, வைபோகமே!

அரசினர் துறையில் உள்ள நிறுவனங்கள், அவை எந்த அளவுக்கு உற்பத்தி செய்ய வேண்டும் என்று திட்டம் வகுக்கப்பட்டுள்ளதோ அதில் எண்பது சத விதம் உற்பத்தி செய்திருந்தாலே போதும், மத்திய நிதி மந்திரி சாவன் இவ்வாண்டு புதிய வரிகள் ஏதும் விதிக்க நேர்ந்திருக்காது. ஆனால் நடப்பதோ....?

- பொக்காரோ எஃகு ஆலையைக் கட்டி முடிக்க ரூ. 671 கோடி ஆகும் என்று 1966ல் மதிப்பிடப்பட்டது; இன்று ரூ. 758 கோடி என உயர்ந்து விட்டது.
- ஹிந்துஸ்தான் ஸ்டீல் நிறுவனம் சென்ற ஆண்டு அடைந்த நஷ்டம் ரூ. 10.9 கோடி. இதுவரையில் இந்த நிறுவனம் அடைந்துள்ள மொத்த நஷ்டம் ரூ. 173 கோடி.
- கன இன்ஜினீரிங் கார்ப்பொரேஷன் சென்ற ஆண்டு அடைந்த நஷ்டம் ரூ. 18 கோடி. இது அதற்கு முந்திய ஆண்டு நஷ்டத்தை விட ரூ. நாலு கோடி அதிகம்!
- நெய்வேலி பழுப்பு நிலக்கரி கார்ப்பொரேஷன் சென்ற ஆண்டு கண்ட நஷ்டம் ரூ. 4.4 கோடி. அதற்கு முந்திய ஆண்டை விட நஷ்டம் அதிகமே. இதுவரையில் இந் நிறுவனம் மொத்தம் ரூ. 23.9 கோடி நஷ்டம் அடைந்துள்ளது.
- சிறிதளவு லாபம் காணும் பிற நிறுவனங்களும் அவற்றின் சக்திக்கேற்பப் பொருள்களை உற்பத்தி செய்வதில்லை. உதாரணமாக உர உற்பத்தி கார்ப்பொரேஷன், திட்டமிட்டதில் ஐம்பது அல்லது அறுபது சத விதமே உற்பத்தி செய்கிறது.

ஆதாரம்: க. சந்தானம் 'ஸ்வராஜ்யா'வில் எழுதியது.

---

இந்தக் கோடியிலிருந்து அந்தக் கோடிக்கு ஒரு தடவை நடந்தாகி விட்டது. பம்பாய் மெயிலின் சுவடே தெரியவில்லை. அவள் நிதானமாக, புடவை, சோளிக்கு ஏற்ற, பாந்தமான சிவப்பு 'ஸ்டட்'டை அணிந்து கொண்டே வந்திருக்கலாம்.

மீண்டும் ஒலிபெருக்கி அலறியது.

மீண்டும் 'சில நிமிடங்கள்' என்ற வார்த்தைகள் காதில் மோதின.

மங்களா கடிகாரத்தைப் பார்த்தாள். ஐந்து இருபத்திரண்டு. பிளாட்பாரத்தின் விளிம்பில் நின்று கொண்டு கண்ணைச் சிரமப்படுத்திப் பார்த்தாள். ஓர் என்ஜின் நகர்ந்து வருவது தெரிந்தது.

அந்தக் கோடியிலிருந்து திரும்பி நடந்தாள். ஒரு சிமெண்ட் பெஞ்சியை அடுத்துக் கொண்டு வாத்துக் கூடைகள். 'குவா, குவா' என்ற எக்காளம். ஓரிரு மூக்குகள் கயிற்று ஜன்னல்கள் மூலம் வெளியே நீட்டிக் கொண்டிருந்தன. ஒரு வாத்து சந்தோஷத்தில் கத்துவதாகத் தோன்றியது.

நடந்து வந்த மங்களா, வாத்துகளை மறந்து ரேணுகாவைப் பற்றி நினைக்க ஆரம்பித்தாள். பம்பாயில் ஒரு பெரிய கம்பெனியில் அவள் ஒரு டைரக்டர். அவளுடைய அப்பாதான் அவளை அந்தப் பதவியில் வைத்திருக்கிறார். சென்னை பிராஞ்சு விஷயமாக வருகிறாள். சென்னைக்கு வந்தால் அவளுடன் தான் தங்குவாள். 'இத்தனை பெரிய குடும்பத்தில் பிறந்து வளரக் கொடுத்து வைக்க வேண்டும்' என்பாள். தாயில்லாத அவள் ஒரே பெண். அந்தத் தனிமையின் ஏக்கம் மங்களா வீட்டில் இருக்கையில் மறைந்து விடும்.

முதல் வகுப்புப் பெட்டிகள் வருகிற இடத்தை விசாரித்துக் கொண்டு அவள் வந்து நின்றாள்.

என்ஜின் அலறி அடித்துக் கொண்டு வந்தது. ஒட்டப் பந்தயக்காரர்கள், சிவப்பு முண்டாசைக் கடைசித் தடவையாகச் சரி செய்து கொண்டு தயாரானார்கள். மங்களாவைப் போல, எதிர்கொண்டு அழைக்க வந்தவர்கள் எங்கே தேடுவது என்று புரியாமல் எல்லாப் பக்கங்களிலும் பார்த்துக் கொண்டு அலைய ஆரம்பித்தார்கள்.

ஒரு முதல் வகுப்புப் பெட்டியில், பெயர்கள் இருந்த 'லிஸ்டை'ப் பார்த்தாள் மங்களா. 'பி' கம்பார்ட்மெண்டில் லோயர் பர்த் ரேணுகாவுக்காக ரிசர்வ் செய்யப்பட்டிருப்பது தெரிந்தது.

ஓரிரு நிமிடங்கள் பெட்டிக்கு வெளியே நின்று ரேணுவுக்காகக் காத்திருந்த மங்களா அவள் வராததைக் கண்டு பொறுமை இழந்தாள்.

சாமான்களுடன் இறங்கிக்கொண்டிருக்கும் போர்ட்டர்களையும், பிரயாணிகளையும் லட்சியம் செய்யாமல் ரயிலினுள் ஏறி, 'பி' கம்பார்ட்மெண்டை அடைந்தாள்.

அங்கே, ஒருவன் அப்போதுதான், ஸாக்ஸை மாட்டி, பூட்ஸைக் கையில் எடுத்துக் கொண்டிருந்தான்.

அவனைத் தவிர மூன்று பர்த்கள் காலியாக இருந்தன.

மங்களா ஏமாற்றத்துடன் திரும்பவும், "ஆர் யூ மிஸ் மங்களா?" என்று அவன் பூட்ஸை மாட்டிக் கொண்டே கேட்கவும் சரியாக இருந்தது.

"எஸ்... ஐ ஆம் மங்களா...."

"யுவர் ஃப்ரண்ட் ரேணுகா குட்நாட் மேக் இ ட்ரிப்" என்று சொன்ன அவன், "கொஞ்சம் இருங்கள். இந்த பூட்சையும் போட்டுக் கொண்டபின் விவரம் சொல்லுகிறேன்" என்றான்.

மங்களா மௌனமாக அவனையும், அவன் கை விரல்கள் பூட்ஸ் லேஸுடன் விளையாடும் அழகையும் பார்த்துக் கொண்டே நின்றாள். (தொடரும்)

# இவர் பாராட்டுக்குரியவர்



தென்னகத்தில் சர்தார் வேதரத்தினம் அவர்களைப் பற்றித் தெரியாதவர்கள் இருக்க முடியாது. அவர்கள் வழியில் வந்த அவர்களின் ஒரே செல்வத் திருக்குமாரர் தான் திரு வே. அப்பாக்குட்டி அவர்கள்.

எளிமை, நேர்மை, சொன்ன சொல் தவறாமை, வாய்மை எனப்படும் இன்னோரன்ன பலதரப்பட்ட நற்குணங்களும் தன்னகத்தே கொண்டு பெரிய பெரிய நிர்வாகங்கள் நடத்தி வருகிறார்கள், திரு வே. அப்பாக்குட்டி அவர்கள். தம்மிடத்தில் உதவி என்று நாடி வருபவர்கள் யாராக இருப்பினும் உடனே இன்முகத்துடன் வரவேற்று இனிமையாகப் பேசித் தம்மால் இயன்றதை உடனே செய்கின்ற உத்தமர் அவர். இந்தக் காலத்துக்கே ஒவ்வாத மேற்கண்ட குணாதிசயங்களைப் பெற்றிருக்கும் உத்தமரான திரு வே. அப்பாக்குட்டி அவர்கள் குடத்திலிட்ட விளக்கு போன்று இருந்து வருகிறார்கள்.

''உழைப்பே உயர்வு'', ''எவர்க்கும் எளியனாய் இரு'' என்ற இரண்டு வாக்கியங்களுக்கும் உரித்தாய் இருப்பவர்கள் இவர்கள். தம் வேலைகள் அனைத்தையும் தாமே செய்து கொள்ளும் சுபாவம். எந்த வேலையையும் ஆழ்ந்த சிந்தையுடன் ஆய்ந்தறிந்து நுட்பமாகக் கண்டறிந்து தாமே முதலில் அதைச் செய்து பார்ப்பார்கள். உழைத்து உயர்வதுதான் மிகவும் சிறப்பானது என்று தம்மிடம் வேலை செய்யும் அனைவரிடமும் அடிக்கடி சொல்வார்களாம். எப்பொழுதும் எளிய தோற்றத்துடன், எவ்வித ஆடம்பரமுமின்றி இருப்பார்கள். அமைச்சர்கள் முதல் பெரிய மனிதர்கள், அரசாங்க அலுவலர்கள் அனைவரையும் தெரிந்தவர்கள்.

இருப்பினும் எந்தச் சிறு உதவி என்று யார் சென்றாலும் இன்முகத்துடன் தம்மால் இயன்றதைச் செய்வார்கள். கொஞ்சம் வசதி படைத்த பெரிய மனிதர்களையே இந்தக் காலத்தில் பேட்டி காணப் பல மணி நேரம் காத்திருக்க வேண்டியிருக்கிறது. அப்படிப் பார்ப்பதற்கும் தக்கபடி அவர்களுக்குத் தெரிந்த மற்றவர்களுடன் போனால்தான் பார்க்க முடிகிறது. இவர்களிடம் அந்த நிலை கிடையாது. எவருடைய தயவும் இல்லாமல் இவர்களை யாரும் எந்த நேரத்திலும் பார்த்துப் பேசலாம்.

வேதாரண்யத்தில் பெண்களுக்கென்றே தனியாக கஸ்தூரிபா காந்தி கன்யா குருகுலமும், ஆண்கள் பெண்கள் சேர்ந்து படிக்கும் (Co-education) ஸ்ரீ தாயுமானவர் வித்தியாலயமும் நடத்தி வருகிறார்கள். குருகுலத்திலே எழுநூற்றுக்கு மேற்பட்ட ஏழைப் பெண்கள் படித்து வருகிறார்கள். உணவு, உறையுள் முதலியன முற்றிலும் இலவசமாகப் பெற்றுப் பெண்கள் படித்து வருகிறார்கள். ''அரசாங்க மான்யத்துக்கு மேல் ஆண்டொன்றுக்கு இருபதினாயிரம் ரூபாய் வரை பற்றாக்குறையாக வருவதாகவும், தற்கால நிலையில் நன்கொடைகள் பெறுவது சிரமமாக இருப்பதாகவும் தெரிகிறது. இந்தப் பற்றாக்குறையைச் சமாளிக்கத் தாம் ஒரு நெசவுத் தொழில் பகுதி நடத்தி வருவதாகவும் அதைப் பெருக்கி வளர்த்து வருவதாகவும் அதன் மூலம் கிடைக்கும் வருவாயைக் கொண்டே பற்றாக்குறையைச் சமாளிக்க வழிவகை செய்து வருவதாகவும் திரு வே. அப்பாக்குட்டி அவர்கள் அடிக்கடி சொல்கிறார்கள். தியாக உணர்ச்சி, உழைப்புச் சக்தி எந்த அளவுக்கு இவர்களிடம் உள்ளன என்பதற்கு மேற்கண்ட கருத்தொன்றே சிறப்பானதாகத் தோன்றுகிறது.



எந்த ஒரு நிகழ்ச்சியோ அல்லது பணியோ செய்தாலும் அது எந்தவிதக் குறைவுமில்லாமல் செய்ய வேண்டும் என்றும் மற்றவர்கள் பாராட்ட வேண்டும் என்பதற்காக ''ஷோ'' (Show) மாதிரி செய்யக்கூடாது என்றும் கூறுவார்கள். எந்த ஒரு நிகழ்ச்சிக்கு ஒப்புக் கொண்டாலும் நேரத்தில் சென்று விடுவார்கள். ஒரு சமயம் மதுரை நிகழ்ச்சி ஒன்றுக்கு வருவதாக ஒப்புக் கொண்டார்கள். திடீரென்று குருகுலத்துக்கு அமைச்சர் வருவதாகத் தகவல் வந்தது. அமைச்சர் வருகைக்கான சகல ஏற்பாடுகள் அனைத்தும் செய்து தக்கவர்களைக் கவனிக்கச் செய்துவிட்டு மதுரை நிகழ்ச்சிக்கே சென்றார்கள்.

சமீபத்தில், குருகுலத்திலேயே வளர்ந்து, படித்த குருகுல வளர்ப்புப் பெண்ணுக்குத் திருமணம் செய்தார்கள். திருமண வரவேற்பைத் தம் வீட்டிலேயே நடத்தினார்கள். தம் வீட்டில் நடக்கும் வைபவமாகவே மிகவும் சிறப்பாகவும் சந்தோஷமாகவும் அதைச் செய்தார்கள். பலனைக் கருதியே எந்தக் காரியமும் நடக்கிற இந்தக் காலத்தில் இம்மாதிரி ஒரு நிகழ்ச்சி மனத்தைத் தொட்டு விட்டது.

எனக்குத் தெரிந்த இந்த ஒரு சில குறிப்புக்களாலேயே இவர்கள் மிகவும் பாராட்டுக்குரியவர்கள் என்று சொல்லலாம் அல்லவா!

— ஆர். ஜானகிராமன்

# பொன்னியின் செல்வன்

அமரர் கல்கி

## அத்தியாயம் நாற்பத்தெட்டு

## "நீ என் மகன் அல்ல!"

ஆதித்த கரிகாலரின் இறுதி ஊர்வலம் காவிரி நதிக்கரையோரமாகத் தஞ்சையை நோக்கிச் சென்ற போது, அந்த ஊர்வலத்தில் சோழ நாட்டு மக்கள் லட்சக்கணக்கானவர்கள் கலந்து கொண்டார்கள். வீரர்களைப் போற்றும் குணம் அந்நாளில் தமிழகத்தில் பெரிதும் பரவியிருந்தது. இடையில் சில காலம் சோழ குலம் மங்கியிருந்து, விஜயாலய சோழர் காலத்திலிருந்து மீண்டும் தலையெடுத்ததைக் கண்டோம் அல்லவா? நூறு ஆண்டுகளாக அந்தக் குலத்தில் பிறந்தவர்கள் ஒவ்வொருவரும் வீரப் புகழில் ஒருவரையொருவர் மிஞ்சிக் கொண்டு வந்தார்கள். விஜயாலயன் மகன் ஆதித்த வர்மன் பல்லவ குலத்தின் புகழை அழித்துத் தொண்டை நாட்டைக் கைப்பற்றினான். அவனுடைய மகன் பராந்தக சக்கரவர்த்தி மதுரையும் ஈழமும் கொண்டு தென்னாடு முழுவதையும் தன் ஆட்சிக்கு உட்படுத்தினான். பராந்தக சக்கரவர்த்தியின் புதல்வர்கள் நால்வரும் ஒருவரையொருவர் வீரத்தில் மிஞ்சினார்கள். அவர்களில் ஒருவன் பாண்டிய நாட்டுப் போரில் உயிர் துறந்தான். மூத்த மகனாகிய இராஜாதித்தனோ, சமுத்திரம் போல் பொங்கி வந்த இரட்டை மண்டலக் கன்னர தேவனின் பெரும் படையுடன் தக்கோலத்தில் போர் தொடுத்து அம்மாபெரும் சைன்யத்தை முறியடித்த பிறகு, போர்க்களத்திலேயே வஞ்சனையினால் கொல்லப்பட்டு, 'யானை மேல் துஞ்சின தேவன்' ஆயினான். கண்டராதித்தர் சிவஞானச் செல்வராயினும் அவரும் வீரத்தில் குறைந்தவராக இல்லை. பின்னர், ஆற்றூர்த் துஞ்சிய அரிஞ்சயனைப் பற்றியோ சொல்ல வேண்டியதில்லை. அரிஞ்சயனுடைய குமாரர் சுந்தர சோழர் காலத்தில் தக்கோலப் போருக்குப் பிறகு சிறிது மங்கியிருந்த சோழ சாம்ராஜ்யத்தின் புகழ் மீண்டும் மகோந்நதமடைந்தது.

இவ்வாறு வழி வழியாக வந்த வீர பரம்பரையில் பிறந்தவர்களில் ஆதித்த கரிகாலனுக்கு ஒப்பாருமில்லை, மிக்காருமில்லை என்று மக்களின் ஏகோபித்த வாக்கே எங்கும் கேட்கக் கூடியதாயிருந்தது. பன்னிரண்டாம் வயதில் சேவூர்ப் போர்க்களத்தில் அவன் புரிந்த வீரதீர சாகசச் செயல்கள் அர்ச்சுனன் மகனான அபிமன்யுவின் புகழையும் மங்கச் செய்து விட்டனவல்லவா?

இத்தகைய வீராதிவீரன் சில வருட காலமாகத் தஞ்சைக்கு வராமல் காஞ்சியிலேயே தங்கியிருந்த காரணம் பற்றிப் பலவித வதந்திகள் உலாவி வந்தன. சிற்றரசர்கள் சூழ்ச்சி செய்து மதுராந்தகனுக்குப் பட்டம் கட்டும் நோக்கத்துடன் ஆதித்த கரிகாலனைத் தஞ்சைப் பக்கம் வராதபடி செய்து வருகிறார்கள் என்பது ஒரு வதந்தி. முன்னொரு காலத்தில் கரிகால் வளவன் வடநாட்டுக்குப் படையெடுத்துச் சென்று இமயமலையின்

உச்சியில் புலிக் கொடியை நாட்டிவிட்டு வந்ததுபோல், அதே பெயர் கொண்ட ஆதித்த கரிகாலனும் செய்ய விரும்பிச் சபதம் செய்திருக்கிறான் என்றும், அந்தச் சபதம் நிறைவேறாமல் அவன் தஞ்சைக்குத் திரும்ப விரும்பவில்லை யென்றும், அதற்குப் பழுவேட்டரையர் முதலியவர்கள் குறுக்கே நின்று தடுத்து வருகிறார்கள் என்றும் இன்னொரு வதந்தி பரவியிருந்தது.

எனவே, திடீர் என்று ஒரு நாள் ஆதித்த கரிகாலன் இறந்து விட்டான் என்றும், சம்புவரையரின் மாளிகையில் வஞ்சனையினால் கொல்லப் பட்டான் என்றும் செய்தி பரவவே, சோழநாட்டு மக்களின் உள்ளக் கிளர்ச்சி எப்படியிருந்திருக்கும் என்று சொல்ல வேண்டியதில்லை அல்லவா?

அந்த வீர புருஷனுக்கு இறுதி மரியாதை செய்வதற்கு மக்கள் லட்சக் கணக்கிலே திரண்டு வந்து சேர்ந்ததிலும் வியப்பில்லைதானே ?

ஊர்வலம் தஞ்சையை அணுகிய போது, ஜனக் கூட்டம் ஜனசமுத்திரமாகவே ஆகிவிட்டது. தஞ்சை நகர மக்களும், தஞ்சைக் கோட்டையைச் சுற்றிலும் சூழ்ந்திருந்த தென் திசைப் படை வீரர்களும் கூட்டத்தோடு கூட்டமாகச் சேர்ந்து கொண்டார்கள். அவர்களை யெல்லாம் கோட்டைக்குள் அநுமதித்தால் பல விபரீதங்கள் நேரிடலாம் என்று முதன் மந்திரி அநிருத்தர் எச்சரித்ததின் பேரில், துயரக் கடலில் மூழ்கியிருந்த சக்கரவர்த்தியும் அவருடைய குடும்பத்தாரும் கோட்டைக்கு வெளியிலேயே வந்து விட்டார்கள்.

சுந்தர சோழரைப் பார்த்ததும், அந்த மாபெரும் கூட்டத்தில் ஒரு பேரிரைச்சல் எழுந்தது. "சோழ நாட்டைச் சுந்தர சோழர் அரசு புரிந்த போது 'ஹா' என்ற சத்தமே கேட்டதில்லை" என்று சிலா சாஸனங்கள் சொல்லுகின்றன. ஆதித்த கரிகாலரின் மரணத்துக்கு முன்னால் குடிகொண்டிருந்த நிலைமை அச் சிலாசாஸனங்களில் பொறிக்கப்பட்டிருக்கின்றன.

இன்றைக்கோ, "ஹா! ஹா!" "ஐயையோ!" என்ற சத்தங்கள் லட்சக்கணக்கான குரல்களில் எழுந்தன. அபிமன்யுவைப் பறி கொடுத்த அர்ச்சுனனுடைய நினைவு அநேகருக்கு வந்தது.. ஆனால் அபிமன்யுவோ பகைவர் கூட்டத்துக்கு மத்தியில் தன்னந்தனியாக நின்று அஸகாய சூரத்தனங்கள் செய்து உயிரை விட்டான்.

இங்கேயோ ஆதித்த கரிகாலன் மதுராந்தகனின் மண்ணாசையினாலும் சிற்றரசர்களின் அதிகார வெறியினாலும் சூழ்ச்சிக்கு ஆளாகிக்கொல்லப்பட்டான். மக்களின் மனத்தில் குடிகொண்டிருந்த இந்த எண்ணத்தை உறுதிப்படுத்தும் காரியங்களும் வெளியிலே நடந்தன.

ஆதித்த கரிகாலருடைய சடலம் தஞ்சைக் கோட்டைக்கு வெளியே எல்லாரும் வந்து பார்க்கும்படியாக வைக்கப்பட்டிருந்தது. அனைவரும் வந்து பார்த்துக் கண்ணீர் விட்டு விட்டுப் போனார்கள். ஆனால் மதுராந்தகன் மட்டும் வரவில்லை. பழுவேட்டரையர்களும் வரவில்லை.

பழுவேட்டரையர்கள் தங்கள் நண்பர்களைச் சைன்யங்களுடன் ஒன்று சேர்த்துக் கொண்டிருக்கிறார்கள் என்று வதந்தி பரவவும் ஆரம்பித்திருந்தது.

எனவே, ஆதித்த கரிகாலருக்கு வீர மரணத்துக்குரிய முறையில் ஈமச் சடங்குகள் நடந்து, சக்கரவர்த்தியின் குடும்பத்தினர் தஞ்சைக் கோட்டைக்குள் பிரவேசித்த பிறகும் ஜனக் கூட்டம் விரைவாகக் கலையவில்லை.

"மதுராந்தகன் வீழ்க!" "பழுவேட்டரையர்கள் வீழ்க!" என்னும் கோஷங்கள் முதலில் இலேசாக எழுந்தன. நேரமாக, ஆக, இந்தக் கோஷங்கள் பலம் பெற்று வந்தன.

திடீரென்று ஜனக் கூட்டத்தில் ஒரு பகுதியினர் கோட்டைக் கதவுகளை இடித்து மோதித் திறந்து கொண்டு தஞ்சை நகருக்குள் பிரவேசித்தார்கள். முதலில் அவர்கள் பழுவேட்டரையர்களின் மாளிகைக்குச் சென்றார்கள். வெளியிலே நின்று, "பழுவேட்டரையர்கள் வீழ்க!" என்று சத்தமிட்டார்கள்.

முதன் மந்திரி அநிருத்தரின் கட்டளையின்பேரில் வேளக்காரப் படை வீரர்கள் வந்து ஜனங்களைக் கலைந்து போகச் செய்ய நேர்ந்தது.

இதற்கிடையில், மதுராந்தகத்தேவன் அநிருத்தரின் வீட்டில் ஒளிந்து கொண்டிருக்கிறான் என்பதாக ஒரு வதந்தி பரவியது. ஜனங்கள் அநிருத்தரின் வீட்டைப் போய்ச் சூழ்ந்து கொண்டார்கள்.

"எங்கே அந்தப் பேடி மதுராந்தகன்? வெளியே வரச் சொல்லுங்கள் மதுராந்தகனை!" என்று கத்தினார்கள்.

அச்சமயம் உண்மையாகவே மதுராந்தகன் அநிருத்தரின் வீட்டுக்குள்ளிருந்தான். வெளியிலே ஜனங்களின் கூக்குரலைக் கேட்டுவிட்டு, அவன் நடுநடுங்கினான். அநிருத்தரைப் பார்த்து, "முதன் மந்திரி! என்னை எப்படியாவது கோட்டைக்கு வெளியே அனுப்பி விடுங்கள். ரகசியச் சுரங்க வழியாக

அனுப்பி விடுங்கள். என்னை ஆதரிக்கும் நண்பர்களுடனே நான் போய்ச் சேர்ந்து கொள்கிறேன். இந்த உதவியைத் தாங்கள் செய்யும் பட்சத்தில் நான் சோழ சிங்காதனத்தில் ஏறும் போது தங்களையே முதன் மந்திரியாக வைத்துக் கொள்வேன்'' என்று சொன்னான்.

''ஐயா! சிங்காதனம் ஏறுவதைப் பற்றி இப்போது ஏன் பேச வேண்டும்? இன்னும் சுந்தர சோழச் சக்கரவர்த்தி உயிருடன் இருக்கிறாரே'' என்றார் முதன் மந்திரி அநிருத்தர்.

''சுந்தர சோழர் தம் குமாரனுக்கு ஈமக் கடன் செய்து விட்டுத் திரும்பி வந்ததை நீங்கள் பார்க்கவில்லையா? அவர் முகம் எவ்வாறு பேயடித்தது போலிருந்தது என்பதைக் கவனிக்கவில்லையா? நான் இந்த மச்சு மேடையிலிருந்து பார்த்துக்கொண்டிருந்தேன். அதிக காலம் இனி உயிரோடு இருக்க மாட்டார். அருள்மொழி வர்மனாவது நானாவது சிங்காதனம் ஏறி இந்த ராஜ்யத்தை ஆள வேண்டும். சுந்தர சோழர் எனக்குப் பட்டம் கட்டவே பிரியப்படுகிறார். நீங்களும் அன்னையும் எதற்காக அதற்குக் குறுக்கே நிற்க வேண்டும்?'' என்றான் மதுராந்தகன்.

''இளவரசே! தங்கள் அன்னை குறுக்கே நிற்பதற்குக் காரணம் இல்லாமல் போகுமா? அதோ கேளுங்கள், இந்த வீட்டைச் சூழ்ந்திருக்கும் மக்களின் கூச்சலை. சுந்தரசோழர் இஷ்டப்பட்டால் மட்டும் போதுமா? சோழ நாட்டு மக்கள் இஷ்டப்பட வேண்டாமா?'' என்று கூறிவிட்டு, ''ஆகா! இது என்ன?'' என்று அநிருத்தர் வீதியில் எட்டிப் பார்த்தார்.

பழைய கூக்குரலுக்குப் பதிலாக இப்போது ''அருள்மொழிவர்மர் வாழ்க!'' ''பொன்னியின் செல்வர் வாழ்க!'' ''ஈழங்கொண்ட வீராதி வீரர் வாழ்க!'' என்ற கோஷங்கள் கிளம்பின.

கம்பீரமான குதிரை மேலேறி அருள்மொழி வர்மர் அங்கே வந்து கொண்டிருந்தார். அவரைப் பின்தொடர்ந்து அத்தனை ஜனங்களும் போனார்கள். சில நிமிஷ நேரத்துக்கெல்லாம் அநிருத்தர் வீட்டின் வெளிப்புறம் வெறுமையாகி விட்டது. அநிருத்தருக்கு முன்னாலிருந்து மதுராந்தகனும் அந்தக் காட்சியைப் பார்த்துக் கொண்டிருந்தான். அவனுடைய கண்கள் பொறாமைத் தீயினால் கோவைப் பழம் போலச் சிவந்தன. ''ஆகா! இந்தப் பிள்ளையிடம் அப்படி என்னதான் வசீகரம் இருக்கிறதோ?'' என்று தனக்குத் தானே சொல்லிப் பொருமிக் கொண்டான்.

அநிருத்தர், ''இளவரசே! ஈழத்து ராணியைக் கொன்றவனைப் பின் தொடர்ந்து சின்னப் பழுவேட்டரையர் ஓடிய போது நீர் அந்தப் பாதாளச் சுரங்க வழியில் இருந்ததற்குக் காரணம் என்ன?'' என்று கேட்டார்.

''பொன்னியின் செல்வன் யானைப் பாகன் வேஷத்தில் அரண்மனைக்கு வந்த போது எனக்கு மிக்க மனச் சோர்வு உண்டாயிற்று. அவனும் நானும் ஒரே சமயத்தில் இந்தக் கோட்டைக்குள்ளிருக்கப் பிரியப்படவில்லை. பழுவேட்டரையர் சுரங்க வழியை எனக்குக் காட்டிக் கொடுத்திருந்தார். அதன் வழியாகப் போய் விடலாமா என்று யோசித்துக் கொண்டு அரண்மனைத் தோட்டத்தைச் சுற்றிக் கொண்டிருந்தேன். அப்போது ஒருவன் சுரங்கப் பாதை வழியாக வெளியே வருவதைப் பார்த்தேன். அவன் என்னை நெருங்கி, 'இளவரசே! தங்களைப் பார்க்கத்தான் வந்தேன். பெரிய பழுவேட்டரையரும், கந்தமாறனும் தங்களை உடனே அழைத்து வரும்படி என்னை அனுப்பினார்கள். தங்கள் சிம்மாதன உரிமையை ஆதரித்து நிற்கப் பெரிய சைன்யங்கள் தயாரா யிருக்கின்றன' என்றான். அவனுடைய தோற்றம் எனக்குச் சிறிது சந்தேகத்தை உண்டாக்கிற்று.

'பெரிய சைன்யம் தயாராகி யிருந்தால் நான் ஏன் வெளியே வரவேண்டும்? அவர்களே இங்கு வந்து கொடும்பாளூர்ப் படைகளைத் தோற்கடித்து விட்டு என்னைச் சிம்மாதனத்தில் ஏற்றி வைக்கட்டுமே!' என்றேன்.

அந்த மனிதன், 'இளவரசே! அது மட்டுமல்ல. தங்களுடைய பிறப்பைக் குறித்து ஒரு பயங்கரமான மர்மம் இருக்கிறது. அதை வேறு யாரும் உங்களுக்குச் சொல்லத் துணியமாட்டார்கள். நான் சொல்வேன்' என்றான்.

'அப்படியானால் வா! உடனே போகலாம்' என்றேன் நான். அதற்கு அவன், 'முதன் மந்திரி அநிருத்தருக்கு ஒரு செய்தி சொல்ல வேண்டியிருக்கிறது. அதைச் சொல்லி விட்டு வருகிறேன். நீங்கள் முதலில் போய்ச் சுரங்கப் பாதையில் ஒளிந்திருங்கள்' என்றான்.

அதன் பேரில் பொக்கிஷ நிலவறைக்குள் போய் நான் காத்திருந்தேன். முதன் மந்திரி! தங்களை அவன் வந்து பார்த்தானா? என் பிறப்பைக் குறித்த பயங்கரமான மர்மம் என்னவாக இருக்கக் கூடும்?'' என்றான் மதுராந்தகன்.

''இளவரசே! தங்களுக்கு அதை வெளியிட்டுச் சொல்லும் உரிமை பெற்றவர் தங்கள் அன்னை செம்பியன் மாதேவி ஒருவர்தான். எனக்கு ஓரளவு

தெரிந்திருந்தாலும் நான் அதைச் சொல்லக்கூடாது'' என்றார் அநிருத்தர்.

இந்தச் சமயத்தில் அம்மாளிகையின் வாசலில் மறுபடியும் கலகலப்புச் சத்தம் கேட்டது. முதன் மந்திரி எட்டிப் பார்த்தார். ''ஆகா! இதோ உங்கள் அன்னையே வந்து விட்டார்'' என்றார்.

சிறிது நேரத்துக்கெல்லாம் செம்பியன் மாதேவி அநிருத்தரின் வீட்டுப் பெண்மணிகளைப் பார்த்துப் பேசிவிட்டு மேல் மாடிக்கு வந்தார். அந்தத் தேவியின் முகத்தில் அப்போது சோகம் ததும்பிக் கொண்டிருந்தது. அநிருத்தர் எழுந்து உபசரித்துச் சுட்டிக் காட்டிய ஆசனத்தில் தேவி உட்கார்ந்தார். சிறிது நேரம் தரையைக் குனிந்து பார்த்த வண்ணமாக இருந்தார். அந்த மேல் மாடத்திலும் மாளிகைக்கு வெளியிலே வீதியிலும் நிசப்தம் குடிகொண்டிருந்தது. பின்னர் செம்பியன் மாதேவி மதுராந்தகனையும், அநிருத்தரையும் ஒரு முறை பார்த்துவிட்டு, ''ஐயா! என் கணவர் என் தலை மீது இந்தப் பாரத்தைச் சுமத்திவிட்டு மேற்றிசைக்கு எழுந்தருளி விட்டார். தவறு செய்தது என்னவோ நான்தான். ஆனால் அவர் இச்சமயம் இருந்திருந்தால் நான் இவ்வளவு துன்பப்பட நேர்ந்திராது'' என்றாள்.

அப்போது மதுராந்தகன் கண்களில் கோபக் கனல் பறக்க, ''நீ ஏன் இப்படி வேதனைப்படுகிறாய்? ஏன் அடிக்கடி என் தந்தையின் பெயரை எடுக்கிறாய்? தஞ்சாவூர்ச் சிம்மாதனத்தில் நான் ஏறப் போவதென்னவோ நிச்சயம். அதற்குத் தடையாக இருந்தவர்களில் ஒருவன் இறந்து போனான். அருள்மொழி வர்மனோ என்னைவிட வயதில் சிறியவன். நான் உயிரோடு இருக்கும் போது அவனுக்கு ஒருநாளும் பட்டம் கட்ட மாட்டார்கள். நீ மட்டும் குறுக்கே நில்லாமல் கருணை செய்ய வேண்டும். அம்மா! பெற்ற பிள்ளைக்குத் துரோகம் செய்யும் அன்னையைப் பற்றி யாராவது கேள்விப்பட்டதுண்டா? சிவபக்த மணியாகிய நீ ஏன் எனக்குத் துரோகம் செய்யப் பார்க்கிறாய்?'' என்றான்.

''என் குழந்தாய்! பெற்ற பிள்ளைக்குத் தாய் விரோதமாக இருப்பது பயங்கரமான துரோகம்தான். ஆனால் என் கணவர் எனக்கு அவ்விதம் கட்டளையிட்டுச் சென்றிருக்கிறார். அவருடைய கட்டளையை நிறைவேற்றுவது என் கடமை. சொல்லுகிறேன், கேள்! மண்ணாசை ரொம்பப் பொல்லாதது. ராஜ்யத்தின் மேல் ஆசை அதைவிடக் கொடியது. தலையிலே முடிசூடிக் கொண்டிருப்பவர்களைப் போல் இவ்வுலகத்தில் கவலைக்குள்ளாகிறவர்கள் வேறு யாருமில்லை. சிங்காதனத்தில் வீற்றிருப்பவர்களைப் போல் மன அமைதியின்றிச் சங்கடப்படுபவர்களும் யாரும் இல்லை. தலையிலே கிரீடம் வைத்துக் கொண்டிருந்த காரணத்தினால் அல்லவா வீர பாண்டியன் உயிரை விட நேர்ந்தது? பூலோக ராஜ்யத்தைக் காட்டிலும் எவ்வளவோ மடங்கு மேலானது சிவலோக சாம்ராஜ்யம். நாம் இந்த ஊரை விட்டே போய் விடுவோம் வா. க்ஷேத்திர தரிசனம் செய்து கொண்டு கைலயங்கிரி வரையில் போவோம். சாக்ஷாத் கைலாசநாதரின் கருணைக்குப் பாத்திரமாவோம்.''

''ஆகா! கைலாச யாத்திரை போவதற்குத் தங்களுக்குத் தக்க பருவம்தான். எனக்கு இன்னும் பிராயம் ஆகவில்லை. இந்த உலகத்தின் சுக துக்கங்கள் எதையும் நான் இன்னும் அநுபவிக்கவில்லை. உடம்பெல்லாம் சாம்பலைப் பூசிக் கொண்டு 'சிவ சிவா' என்று பைத்தியக்காரனைப் போல் அலைந்து திரியும்படி என்னை நீ வளர்த்து விட்டாய். அந்தப் பரமசிவனுடைய பெருங் கருணையினாலேயே என்னிடம் இப்போது ராஜ்யம் நெருங்கி வந்திருக்கிறது. அதை ஏன் நான் கைவிட வேண்டும்?'' என்று கேட்டான் மதுராந்தகன்.

''அப்பனே! உன்னை நெருங்கி வந்திருக்கும் ராஜ்யம் எத்தனையோ அபாயங்களுடன் சேர்ந்து வந்திருக்கிறது. நீ சிம்மாதனம் ஏறுவதற்கு ஒரு தடை நீங்கி விட்டது. ஆதித்த கரிகாலன் இறந்து விட்டான் என்று சொன்னாய். சற்று முன்னால் இந்த வீட்டைச் சுற்றி நின்று கொண்டிருந்த ஜனங்கள் கூச்சலிட்டது உன் காதில் விழவில்லையா? மதுராந்தகா! ஆதித்த கரிகாலன் இறந்ததற்கு நீயும் பழுவேட்டரையர்களுமே காரணம் என்று மக்கள் நினைக்கிறார்கள். உன்னை எப்படிச் சக்கரவர்த்தியாக அவர்கள் ஒப்புக் கொள்வார்கள்?''

''அம்மா! அதையெல்லாம் ஜனங்கள் வெகு சீக்கிரம் மறந்து விடுவார்கள். என்னைச் சிங்காதனத்தில் ஏற்றிவிட்டால் என்னையே சக்கரவர்த்தி என்று ஒப்புக்கொள்வார்கள். இன்னும் சொல்கிறேன் கேள். கரிகாலனுடைய மரணத்துக்கு யார் காரணம் தெரியுமா? அருள்மொழி வர்மரின் அருமைச் சிநேகிதன் வந்தியத் தேவன்தான். சம்புவரையர் வீட்டில் கரிகாலன் செத்துக் கிடந்த இடத்தில் வந்தியத்தேவன்தான் இருந்தானாம். சம்புவரையரையும், வந்தியத்தேவனையும் பாதாளச் சிறையில் போட்டிருக்கிறார்கள். தனக்குச் சிம்மாதனம் கிடைக்கும் பொருட்டுத் தமையனைக்

கொலை செய்ய ஏற்பாடு செய்தவன் அருள்மொழி வர்மன். இது மட்டும் ஜனங்களுக்குத் தெரியட்டும். அப்புறம் பொன்னியின் செல்வரின் கதி என்ன ஆகிறதென்று பார்க்கலாம்.''

செம்பியன்மாதேவி தம் கண்களில் கனல் வீச, ''அட பாவி! கருணையே உருக்கொண்ட அருள்மொழியைப்பற்றி என்ன வார்த்தை சொல்கிறாய்? உன்னைப் போன்ற துராசை பிடித்தவனையே அவன் கோவிலில் வைத்துக் கும்பிடத் தயாராக இருக்கிறானே. அவனைப்பற்றி நீ மறுபடியும் இப்படிச் சொன்னால் நீ எரிவாய் நரகத்துக்குத்தான் போவாய். உனக்கு இம்மையிலும் மறுமையிலும் கதி மோட்சம் கிடையாது'' என்றாள்.

இதைக் கேட்டதும் மதுராந்தகன் குதித்தெழுந்தான். ''அடி பேயே! உன் சொந்த மகனுக்குச் சாபம் கொடுக்கிறாய். என்னுடைய விரோதிக்கு ஆசி கூறுகிறாய். நீ என்னுடைய தாயாராக இருக்க முடியுமா? இல்லவே இல்லை'' என்று மதுராந்தகன் உள்ளம் நொந்து கொதித்துக் கூறினான்.

அப்போது செம்பியன் மாதேவி, ''அப்பா! உனக்கு நான் இதை என்றைக்கும் சொல்ல வேண்டாமென்றிருந்தேன். உன்னுடைய பிடிவாதத்தினால் சொல்லும்படிசெய்துவிட்டாய். உண்மையிலேயே நான் உன்னைப் பெற்ற தாயார் அல்ல. நீ என் மகனும் அல்ல'' என்றாள்.

மதுராந்தகன் கம்மிய குரலில், ''ஆகா! நான் சந்தேகித்தது உண்மையாகப் போய்விட்டது. நீ என் தாயாரில்லாவிட்டால் என் தாயார் யார்? நான் உன் மகன் இல்லையென்றால் பின் யாருடைய மகன்?'' என்றான்.

தேவி முதன்மந்திரி அநிருத்தரைப் பார்த்து, ''ஐயா! தாங்கள் சொல்லுங்கள். என்னுடைய அவமானத்தை நானே சொல்லும்படி தயவுசெய்து வைக்க வேண்டாம்'' என்றாள்.

முதன் மந்திரி அநிருத்தர், மதுராந்தகனைப் பார்த்துச் சொன்னார்: ''இளவரசே! தங்களைச் சின்னஞ் சிறு குழவிப் பருவத்திலிருந்து எடுத்து வளர்த்த அன்னையை மனம் நோகும்படி செய்து விட்டீர்கள். எப்படியும் ஒரு நாள் தாங்கள் உண்மையை அறிந்து கொள்ள வேண்டியதுதான். இப்போதே அதைத் தெரிந்து கொள்ளுங்கள்.''

❀ ❀ ❀

செம்பியன் மாதேவிக்குக் கல்யாணமான புதிதில் தன் வயிற்றில் ஒரு குழந்தை பிறக்க வேண்டுமென்றும் அக் குழந்தை சோழ சாம்ராஜ்யத்தின் சக்கரவர்த்தியாக வேண்டுமென்றும் ஆசை இருந்தது. அவள் கர்ப்பந் தரித்து, குழந்தைப் பேற்றை எதிர்பார்த்துக் கொண்டிருந்த சமயத்தில், அவளுடைய கணவர் வெளியூருக்குச் சென்றிருந்தார். அதே சமயத்தில் அதே காலத்தில் அக்காளும் தங்கையுமான இரண்டு ஊமை ஸ்திரீகள் அரண்மனைத் தோட்டத்தில் குடியிருந்தார்கள். அவர்களில் ஒருத்தி கர்ப்பந் தரித்துக் குழந்தைப் பேற்றை எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள். செம்பியன் மாதேவி க்ஷேத்திராடனம் சென்றிருந்தபோது அனாதையாகக் காணப்பட்ட அந்தக் கர்ப்ப ஸ்திரீயை அழைத்து வந்திருந்தாள். அவளுடைய சகோதரி தஞ்சாவூருக்கருகில் இருக்கிறாள் என்று கேள்விப்பட்டுக் கர்ப்ப ஸ்திரீக்கு உதவி செய்வதற்காக அவளை வரவழைத்துக் கொண்டிருந்தாள்.

செம்பியன் மாதேவிக்குக் குழந்தை பிறந்தது. முதன் மந்திரி அநிருத்தர் ராஜ்யத்துக்குப் பிள்ளை பிறந்திருப்பதன் பொருட்டு வாழ்த்துக்கூற வந்தார். அப்போது செம்பியன் மாதேவி கண்ணீர் விட்டு 'கோ'வென்று அழுதாள். பிறந்த குழந்தை உயிரில்லாமல் அசைவற்றுக் கட்டையைப் போல் கிடந்தபடியால் அவ்வாறு அவள் துக்கப்பட்டாள்.

''ஐயா! என் கணவன் வந்து கேட்கும் போது நான் என்ன பதில் சொல்வேன்?'' என்று விம்மி அழுதாள். அவளுடைய துயரத்தைக் கண்டு பொறுக்க முடியாமல் அநிருத்தர் ஒரு யோசனை கூறினார். தோட்டத்தில் குடியிருந்த ஊமைப் பெண்ணுக்கு ஓர் ஆணும், ஒரு பெண்ணுமாக இரட்டைக் குழந்தைகள் பிறந்திருப்பதை அவர் அறிந்திருந்தார். அந்த ஊமைப் பெண்ணிடம் சென்று குழந்தைகளை அங்கேயே விட்டு விட்டுப் போய் விட்டால், அவர்கள் அரண்மனையில் வளர்வார்கள் என்று ஜாடையினால் தெரிவித்தார். அந்த ஊமைப் பெண் வெறி பிடித்த பைத்தியக்காரி போல் இருந்தாள். முதலில் அவள் குழந்தைகளைக் கொடுக்க மறுத்தாள். சற்று நேரங் கழித்துக் குழந்தைகளை விட்டு விட்டு ஓடியேவிட்டாள். உடனே அநிருத்தர் அவளுடைய தங்கையைக் கொண்டு ஆண் குழந்தையைச் செம்பியன் மாதேவியிடம் கொண்டு விடச் செய்தார். உயிரின்றிக் கட்டை போல் இருந்த குழந்தையை ஒருவருக்கும் தெரியாமல் கொண்டு போய்ப் புதைத்து விடும்படி ஊமைத் தங்கையிடம் கொடுத்தனுப்பி விட்டார். மற்றொரு பெண் குழந்தையைத் தன்னுடைய வீட்டுக்கு அழைத்துச்சென்று அங்கிருந்த தன்னுடைய சீடன் ஆழ்வார்க்



# யார் நல்லவள்?

விவேகன்

**ஆ**ணவனை அலுவலகத்துக்கு அனுப்பிவிட்டுக் கதவைத் தாளிட்டுக் கொண்டு உள்ளே வந்தாள் வனஜா. பின்கட்டிலிருந்து வேலைக்காரி முனியம்மா, "அம்மா...." என்று குழைந்தபடி அவள் எதிரில் வந்தாள்.

"என்னடியம்மா..." என்று சலிப்புடன் கேட்டுக் கொண்டே சமையலறைக்குள் நுழைந்து விட்டாள் வனஜா. முனியம்மா இப்படிக் குழைந்தால் அதற்கு ஏதேனும் காரணம் இல்லாமல் இருக்காது.

"மூணு ரூவா இருந்தால் கொடும்மா. அரிசி வாங்கணும். ரெண்டு நாளா புள்ளைங்களெல்லாம் சாப்பாடு இல்லாமல் கெடக்குதுங்க...."

"மூன்று ரூபாய்! அடேயம்பா! என் கையில் நயா பைசா கிடையாது!" உள்ளேயிருந்தபடியே பதில் சொன்னாள் வனஜா.

"ரெண்டு ரூபாயாச்சும் கொடும்மா...." என்று முனியம்மாள் கெஞ்சினாள்.

"சும்மா தொணதொணக்காதே, முனியம்மா! கையிலே காக இல்லாமல் நானே கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறேன். நீ வேறு..." என்று அலுத்துக்கொண்டாள் வனஜா.

முனியம்மா போய்விட்டாள்.

சாப்பிட உட்கார்ந்த வனஜாவுக்கு முனியம்மாவின் கையில் இரண்டு ரூபாய் கொடுக்கக் கூடாது என்கிற எண்ணமில்லை. ஆனால் அவள் கையில் இருந்ததோ பத்தே ரூபாய்கள்தான். இன்றைக்குத் தேதி இருபத்திரண்டு. இன்னும் எட்டு நாட்களைத் தள்ளியாக வேண்டுமே! சமையலறை வேலைகளை முடித்துக் கொண்டு வனஜா வெளியே வருவதற்கும் தெருக் கதவு தட்டப்படுவதற்கும் சரியாக இருந்தது. விரைந்து சென்று கதவைத் திறந்தாள் வனஜா.

"சாப்பாடாயிற்றா?" என்று வினவியபடியே கோடி வீட்டுக் கமலா உள்ளே வந்தாள்.

"ஓ! ஆயிற்று. வாயேன்... வந்து உட்காரேன்..." என்றாள் வனஜா முக மலர்ச்சியுடன்.

"உட்கார நேரமில்லை வனஜா. அவசரமாக ஓர் ஐந்து ரூபாய் வேண்டியிருக்கிறது. உன்னிடம் இருக்குமா?" என்று கேட்டாள் கமலா.

ஒரு விநாடி யோசித்தாள் வனஜா. 'முனியம்மாளுக்கு இரண்டு ரூபாய் கொடுத்தால் கைச்செலவுக்கும் போதாமல் போய்விடும் என்று எண்ணினேனே! இவளுக்கு ஐந்து ரூபாய் எப்படிக் கொடுப்பது?'

"இல்லையா, வனஜா? பரவாயில்லை. உன் கணவருக்கு என் கணவரைவிடக் குறைந்த சம்பளம்தானே? உனக்கு மட்டும் எப்படி மாதக் கடைசியில் கையில் பணம் புரளும்.....? வேறு எங்கேயாவது கேட்டுப் பார்க்கிறேன். வரட்டுமா ?" என்று மொழிந்தபடியே நடந்தாள் கமலா.

"கொஞ்சம் இரு, கமலா! இதோ வந்துவிட்டேன்" என்று வனஜா உள்ளே சென்று ஓர் ஐந்து ரூபாய் நோட்டை எடுத்து வந்து கமலாவிடம் கொடுத்தாள்.

"ரொம்ப நன்றி, வனஜா! முதல் தேதி திருப்பித் தந்து விடுகிறேன்" என்று சொல்லி விட்டுப் போய் விட்டாள் கமலா.

'என் கணவருக்குக் குறைந்த சம்பளமாமே? ஒழுங்காகக் குடித்தனம் செய்தால் மாதக் கடைசியில் கூடக் கையில் காசு இருக்குமாக்கும்' என்று உள்ளூறத் தனக்குத் தானே நற்சான்றிதழ் வழங்கிக் கொண்டாள் வனஜா.

**அ**ன்று மாலை வேலைக்கு வரும் போது முனியம்மா சொல்லிக் கொண்டு வந்தாள்: "நீ ரெண்டு ரூவா தரமாட்டேன்னுட்டியே...கோடி வீட்டுக் கமலம்மாவைக் கேட்டேன். மூணு ரூவா கொடுத்தாங்க. அவங்க எப்பக் கேட்டாலும் கொடுப்பாங்க. இல்லேன்னு சொன்னதேயில்லே. ரொம்ப நல்ல குணம்...."

முனியம்மா கமலாவின் வீட்டுக்கும் வேலைக்காரி. வனஜா திறந்த வாயை மூடவில்லை.

---

கடியானிடம் கொடுத்துப் பாண்டிய நாட்டுக்கு அனுப்பி வைத்து விட்டார்.

இவ்விதம் குழந்தை மாற்றம் செய்தது செம்பியன் மாதேவியின் உள்ளத்தில் உறுத்திக் கொண்டேயிருந்தது. ஒரு நாள் கண்டராதித்த தேவரிடம் உண்மையை ஒப்புக் கொண்டு விட்டாள். அந்த மகான், "அதனால் பாதகமில்லை! பெண்ணே! யார் வயிற்றில் பிறந்த குழந்தையாக இருந்தால் என்ன? சிவபெருமான் அளித்த குழந்தைதான். உன் வயிற்றில் பிறந்த குழந்தையைப் போலவே வளர்த்து வா. ஆனால் வேறு குலத்தில் பிறந்த பிள்ளை சோழ சிங்காதனத்தில் ஏறக் கூடாது. அப்படிச் செய்வது குலத் துரோகமாகும். ஆகையால் சிறு பிராயத்திலிருந்தே இவனைச் சிவபக்தனாகும்படி வளர்த்து வருவோம். 'சோழ சாம்ராஜ்யம் வேண்டாம். சிவபக்த சாம்ராஜ்யமே போதும்!' என்று இவனே சொல்லும்படி வளர்ப்போம். ஆனால் எந்தக் காரணத்தை முன்னிட்டும் இவனைத் தஞ்சாவூர் சிங்காதனத்தில் ஏற்றி வைப்பதற்கு மட்டும் நாம் உடந்தையாக இருக்கக் கூடாது. அந்தச் சந்தர்ப்பம் வரும்போது நான் உயிரோடு இல்லாவிட்டாலும் நீ உறுதியுடனிருந்து சோழர் குலத்தைக் காப்பாற்ற வேண்டும்!" என்று கேட்டுக்கொண்டார்.

ஃ ஃ ஃ

"**ம**துராந்தகா! நீ கண்டராதித்த தேவருடைய புதல்வனுமல்ல. செம்பியன் மாதேவி வயிற்றில் பிறந்த பிள்ளையுமல்ல. ஊர் சுற்றித் திரிந்த அனாதை ஊமைப் பெண்ணின் மகன். உன்னை இந்தத் தேவி தம் சொந்தக் குழந்தையை விட நூறு மடங்கு அதிகமாகச் சீராட்டிப் பாராட்டி வளர்த்து வந்தார். இப்போது அவருடைய கருத்துக்கு மாறாக நடக்காதே. தேவி சொல்வதைக் கேள். அதனால் உனக்கு நன்மையே விளையும்" என்றார் அநிருத்தர். (தொடரும்



விட்டமின்கள் மற்றும்
தாதுப் பொருட்களுக்கான
'உணர முடியாப் பசி' உங்களுக்கு
சோர்வும் எரிச்சலும் ஊட்டுகிறது...

# வாட்டர்பரீஸ் விட்டமின் டானிக்

## மட்டுமே 12 இன்றியமையாத சத்துக்களை அளிக்கிறது

## அந்த 'உணரமுடியாப் பசி'யைத் தீர்ப்பதற்கு

உங்கள் உடலில் விட்டமின்கள், தாதுக்கள் மற்றும் முக்கிய சத்துக்களுக்கான பசி நிரந்தரமாக இருக்கிறது. இந்த 'உணர முடியாப் பசி'யின் விளைவு— சோர்வு, எரிச்சல், இருப்புக் கொள்ளாமை, பசியின்மை, ஜீரண சக்தி குறைவு.

எல்லா சத்துக்களும் அடங்கிய வாட்டர் பரீஸ் விட்டமின் டானிக் சாப்பிட்டு 'உணர முடியாப் பசி'யைப் போக்குங்கள். அதில் 12 முக்கிய சத்துக்கள் உள்ளன: வளர்ச்சிக்கும், வலிமைக்கும் விட்டமின்கள்; இரத்த விருத்திக்கு இரும்புச்சத்து; நல்ல பசியெடுக்க எல்லாப் பொருட்களும்; நரம்புகளுக்கு உரமூட்ட பாஸ்பேட்டுக்கள்.

சிந்தித்துப் பாருங்கள்; உங்களுக்கு அல்லது உங்கள் குடும்பத்தில் யாரேனும் ஒருவருக்கு வாட்டர் பரீஸ் விட்டமின் டானிக் தேவை இன்றே!

இரண்டு அளவுகளில் கிடைக்கிறது:
250 ml 470 ml.



பெண்மை.
மதிமயக்கும்,
மலைப்பூட்டும்,
மனம் வாட்டும்,
மகிழ்வூட்டும்
பெண்மையின்
பத்துவித
சித்தங்களைப்
படித்தறிந்த
படைப்பு
'மெஃபரின்'




# மெஃப்ரின்

மெஃப்ரின் சேலை அணிபவள்
மங்கையர்க்கரசியாவாள்,
உண்மையிலே அது முழு
நிலவாய்த் தழுவும் மோகன
கனவே. மென்மையிலே
தென்றல் இழைநெய்த துகிலே,
விண் முகிலே.

மெஃப்ரின் 100% பாலியெஸ்டர்
சேலைகள், பாலியெஸ்டர் இழை
கலந்த காட்டன் சேலைகள்;
பாலியெஸ்டர் இழை கலந்த
உடுப்புத் துணிகள்—இலேசான
லான்கள், கோடை நிழல் படரும்
கேம்ப்ரிக்குகள், கோலாகல
நகை மினிரும் பாப்ளின்கள்.

தவிர: அதி நவீனமான அரும்
பெரும் அழகு வண்ணங்களிலும்,
பிரிண்டுகளிலும் 'டெரோலைல்'
பாலியெஸ்டர் இழை கலந்த
காட்டன் ஷர்ட்டிங்குகள்;
இன்னெளி மிளிரும்
வண்ணங்களிலே, வரிகளிலே,
கட்டங்களிலே 'எஸ்டர்காட்'
பாலியெஸ்டர் இழை கலந்த
காட்டன் சூட்டிங்குகள்.

**மபத்லால்
க்ரூப்**

AIYARS-M.167 TM

# சிசுபாலன்

இராவணனையும் சூரபத்மனையுமே நல்லவர்களாகக் காட்டிய 'நாடகக் காவலர்' மனோகர் சிசுபாலனை மாத்திரம் கெட்டவனாகக் காட்ட விரும்புவாரா? ஒரு பாத்திரத்தின் நல்லியல்புகளைக் கண்டுபிடித்து, பிறகு அதே பாத்திரத்தின் தீய இயல்புகளைப் பற்றி ஆராய்ந்து அவற்றின் மூலகாரணத்தைக் கண்டறிந்து மேற்படி பாத்திரத்தின் உண்மைச் சொரூபத்தை மேடையில் காட்டுவதுதான் அவரது நாடகங்களின் சிறப்பியல்பு.

நல்லவனாகவும், கிருஷ்ண பரமாத்மாவிடம் பரம பக்தனாகவும் இருந்த சிசுபாலன் அந்தப் பரந்தாமனையே வெறுத்து, எதிர்த்துப் போர் புரியும் அளவுக்கு மாறினதற்குக் காரணம், நண்பர்களால் ஏற்பட்ட சூழ்நிலை; அந்தச் சூழ்நிலைக்குக் காரணம் விதி; அந்த விதிக்குக் காரணம் சிசுபாலனின் பூர்வ கர்ம பலன்; பூர்வ கர்மபலன் இவ்வளவு கொடுமையாகப் பிரதிபலித்ததற்குக் காரணம், மகா கோபியும், தபஸ்வியுமான துர்வாச மகரிஷியின் சாபம் - இப்படி கதை விரிகிறது.

ஸ்ரீமத் பாகவதம், மகாபாரதம் ஆகிய இரு பெருங் கடல்களைக் கடைந்து "சிசுபாலன்" நாடகம் தயாரிக்கப் பட்டிருக்கிறது. கதைப் பகுதி நிறைய இருந்தாலும் விறுவிறு என்று ஓடும் துரிதமான காட்சி யமைப்பினால் நாடகம் பார்க்க அலுப்புத் தட்டாமல் இருக்கிறது. அருமையான வசனம். நாடகத்தை ஆக்கித் தந்த கவிஞர் பழனிச்சாமிதான் வசனத்தையும் எழுதி யிருக்கிறார். நாடகத்தின் ஹாஸ்யப் பகுதியின் வசனங்களை என். எஸ். ரவிசங்கர் எழுதியிருக்கிறார். அதுவும் பாராட்டுப் பெற்றுவிட்டதென்பதைக் கொட்டகை அதிரச் செய்த ரசிகப் பெருமக்களின் கையொலி தெளிவாக எடுத்துக் காட்டியது.

நடிகர் மனோகர்தான் சிசுபாலன் பாகத்தை ஏற்கத் தகுந்தவர் என்பதை — சிசுபாலன் அன்னையிடம் காட்டிய பரிவும், அன்பும், கிருஷ்ண பரமாத்மாவிடம் காட்டிய பக்தியும், விநயமும், நண்பர்களிடம் காட்டிய நேசமும் பாசமும், இறுதியில் பரந்தாமனைப் பழித்துப் பேசிப் போருக்கு அறைகூவி அழைத்தபோது காட்டிய மிடுக்கும், துடுக்கும், வீரமும், தீரமும் ஐயத்துக்கு இடமின்றி உறுதிப்படுத்துகின்றன.

இடையிடையே காட்சி யமைப்புக்காக நாடகங்களில் சம்பந்தம் இல்லாத ஹாஸ்ய சம்பாஷணைகளைப் புகுத்துவது நெடும் பண்டைக்காலம் முதல் நிகழ்ந்து வரும்; மரபு. "சிசுபாலன்" நாடகம் அந்த மரபுக் கொடுமையிலிருந்து தப்பி விட்டது.

நாடகத்தில் ஒரு புதுமையான பாத்திரம்! பயங்கரத் தோற்றத்துடனும் கனல் கக்கும் கண்களுடனும் காட்சிக்குக் காட்சி தோன்றி நாடகத்தைத் தன் வழிக்குத் திருப்பி நடத்திச் சென்ற விதி என்ற அந்தப் பாத்திரம் மட்டும் இல்லையென்றால் சிசுபாலன் பரந்தாமன் கையால் இறந்திருக்க மாட்டான்! நாமும் நல்லதொரு நாடகத்தைப் பார்த்திருக்க மாட்டோம்!

எம். ஆர். நிர்மலா சிசுபாலனின் அன்னை சாத்துவதி தேவியாக வந்து நன்றாக நடித்தார்; அவர் நடிப்பில் அன்னையின் அளவிடற்கரிய அன்பை அபரிமிதமாகக் காண முடிந்தது. சிசுபாலனின் மனைவி வைசாலினியாகத் தோன்றிய டி. ஆர். லதா உருக்கமாக நடித்தார். இந்நாடகத்திலேயே மிகப் பெரிய நடிகர் மலைப்பாம்புதான்! அது இயல்பாகவே நடித்தது! நிஜப் பாம்பாயிற்றே!

கிருஷ்ண பரமாத்மாவாக ஆர். கே. சித்தன், முகத்தில் புன்னகையும், கரத்தில் புல்லாங்குழலுமாகத் தோன்றித் தம் நல்ல நடிப்பினால் பாராட்டுதலைப் பெற்றார்.

ஒவ்வொரு பாத்திரத்துக்கும் தகுந்த நடிகர்களைத் தேர்ந்தெடுத்த நேஷனல் தியேட்டர்ஸார் பஞ்சபாண்டவர்கள் விஷயத்தில் நம்மையெல்லாம் வஞ்சித்து விட்டார்களே! ஒருவேளை திருஷ்டி பரிகாரமோ!

மனோகரின் நாடகங்களுக்கே உரிய பிரமிப் பூட்டும் அற்புதமான செட்டிங்குகளுக்கும், கோட்டை, கொத்தளங்களுக்கும் இந்நாடகத்திலும் பஞ்சம் இல்லை.

அகழியின் நடுவில் உள்ள துவாரகாபுரிக் கோட்டைக்கு அருகில் சென்று சிசுபாலன் கிருஷ்ண பரமாத்மாவைப் போருக்கு அறைகூவி அழைத்த காட்சி பிரமாதம். அகழியின் அலை ஓசையையே கேட்க முடிந்தது!

இருபத்தைந்து நடிக, நடிகையர்களைக் கொண்ட இம்மாபெரும் இதிகாச நாடகம்— வரலாறு காணாத மகத்தான சாதனை என்று துணிந்து கூறலாம்.

— காந்தன்



# சில மனிதர்கள் சில நினைவுகள்



பாரதியார்

மகாகவி பாரதியாரைப் பார்க்கவேண்டும் என்று நாமக்கல் கவிஞருக்கு நெடுநாளைய அவா. அவர் ஒரு தடவை சென்னைக்கு வந்து ஒரு வார காலம் அலைந்தும் அவரால் பாரதியைப் பார்க்க முடியவில்லை. அடுத்த சந்தர்ப்பத்தில் எப்படியோ பாரதியைச் சந்தித்துவிட்டார். அறிமுகப்படுத்தியவர் நாமக்கல்லாரை ஓர் ஓவியர் என்றே அறிமுகம் செய்து வைத்தார். ஆகையால் பாரதிக்கு அவரும் ஒரு கவிஞர் என்று தெரிந்து கொள்ள முடியவில்லை. பாரதியார் நாமக்கல்லாரைப் பார்த்து, ''நீர் என்னை ஓவியத்தில் தீட்டும், நான் உம்மைக் காவியத்தில் தீட்டுகிறேன்'' என்று கூறினார். நாமக்கல் கவிஞர் விஷயம் இத்துடன் முடிந்துவிடுமோ என்று நினைத்துத் தமக்குக் கவி புனையவும் வரும் என்று தெரிவித்தார். ''அப்படியா! ஒரு பாட்டுப் பாடும்'' என்றார் பாரதி.

''தம்மரசைப் பிறர்ஆள விட்டுவிட்டுத்
தாம்வணங்கிக் கைகட்டி நின்றபேரும்''

என்ற பாட்டின் முதல் அடியை ராமலிங்கம் பிள்ளை பாடியதும் பாரதி ஆவேசத்துடன், ''பாண்டியா! நீ புலவனடா!'' என்று பெருமிதத்துடன் பாராட்டினார்.

ஒரு சமயம் தூத்துக்குடியில் ஒரு பாட்டுப் போட்டி நடத்தினார்கள். பாரதியாரும், நாமக்கல்லாரும் தத்தம் பாட்டுக்களை அனுப்பியிருந்தார்கள். இருவருக்குமே பரிசு கிடைக்கவில்லை. □



நாமக்கல் கவிஞர்

இரக்கத்துக்கும் கருணைக்கும் பெயர்போன தீனபந்து ஆண்ட்ரூஸ் ஒரு சமயம் ருத்ரா என்பவருடன் தங்கி இருந்தார். வழக்கமான சுற்றுப் பிரயாணத்தை மேற்கொள்ள அவர் ஆயத்தம் செய்தபோது நண்பர் ருத்ரா தம் மகன் சுதிரை ஆண்ட்ரூஸிடம் தெர்மாஸ் பிளாஸ்கைக் கொடுக்கச் சொன்னார். சுதிருக்கு அது பிடித்தமான காரியமாகத் தெரியவில்லை. ஞாபகமறதியுள்ள ஆண்ட்ரூஸ் அதை எங்காவது காணமற் போக்கிவிடுவார், என்று நினைத்தான். ருத்ரா ஆண்ட்ரூஸைப் பார்த்து, ''நீங்கள் தொலைக்காமல் கொண்டு வருவதாக இருந்தால் சுதீர் தெர்மாஸ் பிளாஸ்கை உங்கள் பிரயாணத்துக்குக் கொடுத்து உதவுவதாகச் சொல்கிறான்'' என்று மொழிபெயர்த்தார். சுதீர் குறுக்கிடுமுன் ஆண்ட்ரூஸ் சரி என்று தலையை அசைத்து விட்டார்.

பிரயாணத்தை முடித்துக் கொண்டு ஆண்ட்ரூஸ் திரும்பியபோது அவர் தம்முடன் கொண்டுபோன தெர்மாஸ் பிளாஸ்க் வரவில்லை. சுதீர் அதைப் பற்றிக் கேட்டபோது, ''தெர்மாஸ் பிளாஸ்கா? நான் கொண்டு போனேனா?...ஓ! நினைவுவருகிறது. ரயிலில் ஒரு பெண்மணி தன் குழந்தைக்குச் சூடான பானம் வாங்கத் தவித்துக் கொண்டிருந்தாள். அவளிடம் கொடுத்துவிட்டேன் போலிருக்கிறது!...'' என்றார் ஆண்ட்ரூஸ். □




சி. எப். ஆண்ட்ரூஸ்

உலகப் புகழ்பெற்ற ஆங்கிலக் கவிஞர் ஜான் கீட்ஸ் சிறு வயதிலேயே கவி புனையும் திறமை பெற்றவர். குடும்பமோ சாதாரணக் குடும்பம். தந்தை ஒரு குதிரை லாய மேற்பார்வையாளர். கவிஞர்கள் எல்லாருமே பட்டினி கிடந்து சாகப் பிறந்தவர்கள் என்பது அவர் கொள்கை. ஆகையால் தம் மகன் கவிதை எழுதுவதில் கவனம் செலுத்துவதை அவர் விரும்பவில்லை; கண்டித்து வந்தார்.

ஒரு சமயம், தம் மகன் அவன் விருப்பம் போல் கவிதை எழுதுவதில் ஈடுபட்டிருந்ததைக் கண்டு அவருக்குக் கோபம் வந்துவிட்டது. கோபத்தில் மகனை அடித்து நொறுக்கிவிட்டார்.

அப்போது சிறுவன் கீட்ஸ் தந்தையைச் சமாதானப்படுத்தத் தான் இனி கவிதை எழுதுவதில்லை என்று எழுதியே கொடுத்தான். அந்தப் பதிலும் கவிதை உருவிலேயே அமைந்தது.

''அப்பாஅப்பா கருணை காட்டு
எப்போதும்இனி எழுதேன் பாட்டு''

என்ற வகையில் அமைந்திருந்தது அந்தப் பதில். எனினும் கீட்ஸ் புகழ்பெற்ற கவிஞராகவே ஆனார்.

— மேனு

கீட்ஸ் இல்லம்



# சுழிக்காற்று



## அத்தியாயம் 21

டாக்டர் ஈசுவரன் திராட்சைக் கொடி வீட்டைப் பற்றிக் குறிப்பிட்டதும், அதற்காகவே காத்திருந்தவரைப் போல இன்ஸ்பெக்டர், சேகரிடம், ''புரொபசர் சேகர், உங்களிடம் உள்ள காளியின் சாவிக் கொத்தை டாக்டரிடம் கொடுங்கள். அவருக்கு நிறைய வேலை இருக்கிறது. நான் இங்கு வந்து வெகு நேரமாகிறது. உடனே கொஞ்சம் தூங்காது போனால் என்னால் தொடர்ந்து எந்த வேலையும் செய்ய முடியாது...'' என்றார்.

சேகர் தன்னுடைய கோட்டுப் பையிலிருந்து சாவிக் கொத்தை எடுத்தான். ஆனால் அதை டாக்டரிடம் கொடுக்கவில்லை. தன் கைக்குள்ளேயே வைத்து மூடிக் கொண்டு, ''இன்ஸ்பெக்டர் சார், உங்கள் ஞாபக சக்திக்கு ஒரு சோதனை. காளியப்பனைக் கைது செய்து அவனிடமிருந்த சாவிக் கொத்தைக் கைப்பற்றியபோது அதில் எத்தனை சாவிகள் இருந்தன என்று நினைவிருக்கிறதா? சொல்ல முடியுமா?'' என்று கேட்டான்.

ஏகாம்பரம் பொறுமை இழந்தவராக, கடுகடுப்புடன், ''உங்களோடு தமாஷ் பண்ணிக் கொண்டிருக்க எனக்கு நேரமில்லை. அப்போது அதில் இரண்டு சாவிகள் இருந்தன. ஒன்று அவனுடைய டாக்சி சாவி, மற்றது அவனுடைய வீட்டுச் சாவி'' என்றார்.

''இப்போது இதில் மூன்று சாவிகள் இருக்கின்றன'' என்று கூறியபடி

சாவிக் கொத்தை அவரது முகத்துக்கு நேராக உயர்த்தி ஆட்டிக் காட்டினான் சேகர். ''ஒன்று அவனது காரினுடையது, இரண்டாவது அவனுடைய வீட்டின் சாவி, மூன்றாவது திராட்சைக் கொடி வீட்டின் தலைவாசல் திறவுகோல்!''

''உங்களோடு விளையாடிக் கொண்டிருக்க எனக்கு நேரமும் இல்லை. அப்படியொரு மன நிலையிலும் நான் இல்லை'' என்று தன் முன்னால் ஊசலாடிக்கொண்டிருந்த சாவிக் கொத்தைப் பட்டென்று சேகரிடமிருந்து பறித்துக் கொண்டார் இன்ஸ்பெக்டர். ''இது எப்படி?'' என்ற போது அவரது புருவங்கள் நெற்றியில் சுருக்கமிட்டு உயர்ந்தன.

''மிக மிகச் சாதாரணமான விஷயம். உண்மையான கொலைகாரன், காளியப்பனைக் குற்றவாளியாக்கி அவன்மீது நீங்கள் வழக்கை ஜோடிப்பதற்கு உதவி செய்திருக்கிறான் உங்களுக்கு. நிர்மலாவினுடைய டம்பப் பை எதற்காக அவனது டாக்ஸியின் பின் சீட்டில் பதுக்கப்பட்டதோ அதே போன்றதொரு செயல்தான் திராட்சைக் கொடி வீட்டின் சாவியை அவனது சாவிக் கொத்தில் இணைத்திருப்பதும்.''

இன்ஸ்பெக்டர் ஏகாம்பரம் பதில் ஏதும் சொல்லவில்லை. ஒரு நிமிஷம் சேகரையே முறைத்துப் பார்த்துவிட்டுச் சாவியை டாக்டர் ஈசுவரனிடம் நீட்டினார். பிறகு மௌனமாக வெளியேறினார். ஈசுவரனும் அவரைப் பின்பற்றி வெளியேறினார். டாக்டரிடம் கூற வேண்டியவைகளைக் கூறி விட்டு ஏகாம்பரம் ஓய்வெடுக்க விரைந்தார், தம் இருப்பிடத்துக்கு. போகும்போது மஞ்சுளாவிடம் ஒப்படைத்திருந்த காளியின் டாக்ஸியை எடுத்துக் கொண்டு போக மறக்கவில்லை. இம்மாதிரி வழக்குகளில் அரசாங்கத்துக்கு உதவ வேண்டிய கடமை ஈசுவரனுக்கு இருந்ததால் அவர் திராட்சைக்

## கௌசிகன்



இடுக்கண்
களைந்திடும் நட்பு போல்

# வலியைப் போக்கிடும் 'ஆஸ்ப்ரோ'



'ஆஸ்ப்ரோ' மட்டுமே மைக்ரோஃபைன் செய்யப்படுகிறது
<u>அதிவேகமாக</u> வலியை வெளியே இழுப்பதற்காக

நிகோலஸ் (N) தயாரிப்பு

கொடி வீட்டின் நிலவறையில் உள்ள சடலங்களைத் தேடிப் போனார்.

இன்ஸ்பெக்டரை ஊமையாக்கும்படி ஆணித்தரமாகப் பேசிய தன் காதலனை எண்ணிப் பெருமையில் பொங்கிப் போனாள் மஞ்சுளா.

சேகர், கோபால், மஞ்சுளா மூவரும் மறுபடியும் வேப்ப மரத்துப் பங்களாவுக்கு போனதும் மஞ்சுளா கேட்ட முதல் கேள்வி இதுதான்: ''சேகர்... காளிக்கு ஏதோ விபரீதம் நடந்திருக்கிறது.....''

''மஞ்சுளா....'' என்று கூறி ஆதரவாக அவளைத் தன்னோடு அணைத்துக் கொண்ட சேகர், ''நீ ரொம்பக் குழம்பிப் போயிருக்கிறாய். இந்த நிலையில் காளிக்கு என்ன ஆபத்து நேர்ந்திருக்கும் என்று கவலைப்படுவதையும் சேர்த்துக் கொள்ளாதே'' என்றான். ஆனால் மஞ்சுளா வெகு நேரமாகவே காளியைப் பற்றிய கவலையை வளர்த்துக் கொண்டு விட்டாள் என்ற உண்மையும் அவனுக்குத் தெரிந்ததுதான்.

''வேப்ப மரத்துப் பங்களாவுக்கு வந்த போது காளியிடம் இரண்டு சாவிகள் கொண்ட சாவிக் கொத்து இருந்திருக்க வேண்டும். இங்கு நம்மைக் காண வந்து, நாம் அவனுக்குப் புகலிடம் அளித்த பிறகு அவன் தன் சாவிக் கொத்தை எப்படித் தொலைத்தான் அல்லது அவனிடமிருந்து அதை யார் பறித்துப் போயிருக்கக் கூடும்? சேகர், எனக்கென்னமோ ஒரே நடுக்கமாக இருக்கிறது. காளிக்கு — அவன் உயிருக்கு ஏதோ ஆபத்து ஏற்பட்டிருக்கிறது. நாம் காளியைத் தேடிப் பார்த்தாக வேண்டும்'' என்றாள் மஞ்சுளா. அவள் குரலும் முகமும் நன்றாக இல்லை.

''நாம் இப்போது என்ன தேடியும் பயன் இல்லை மஞ்சு....'' என்ற சேகர் சோபாவில் அநேகமாய்ப் படுத்த நிலையில் சாய்ந்துகொண்டு ஒரு கொட்டாவிக்கு விடுதலை கொடுத்தான். ''போலீஸ் இலாகாவின் துப்பறியும் துரைசாமி இப்போது அந்தக் காரியத்தைத் தம் சகாக்களோடு நடத்திக் கொண்டிருப்பார். நாம் ஓய்வின்றி இப்படியே கவலையும் காரியமுமாக இருப்போமானால் நம்மைப் படுக்கையில் தள்ளிவிடும் இயற்கை....''

தன் நண்பனிடம் தானே ஆரம்பிக்க வேண்டும் என்றிருந்த ஒரு பிரச்னையை அவனே கூறியதும் கோபாலுக்கு ஒரே குஷி. அப்படியொரு தூக்கம் அவனை வெகுநேரமாகத் தழுவிக் கசக்கி எடுத்துக் கொண்டிருந்தது. ''உண்மைதான் சேகர். நமக்கு இப்போது அவசியமானது ஓய்வு'' என்று கூறியபடி நித்திரையின் வசப்படத் தயாரானான்.

அவ்விருவரது மன நிலையை ஒருவாறு புரிந்து கொண்ட மஞ்சுளா அவர்களிடம் விடைபெற்றுக் கொண்டு தன் அறைக்குப் போனாள் ஓய்வு பெறுவதற்காக.

கோபால், அவனுக்கிருந்த அசதிக்கு அங்கேயே அப்படியே ஒரு சோபாவில் சட்டையைக் கிடத்தத் திட்டமிட்டு, பனியனோடு பக்குவமாக உடலை ஒரு வசதியான கோணத்தில் இருத்தித் துயில் கொள்ளப் போகும் தருணத்தில் அவனை இத்தனை நேரமாகத் தழுவித் தவிக்கச் செய்து வந்த தூக்கம் சட்டென்று விலகி ஓடிப் போயிற்று. ஏதோ ஒரு மயக்க நிலையிலிருந்து விடுபட்டவனைப் போல ''நான் தூங்கப் போவதில்லை'' என்றான் சேகரைப் பார்த்து. சேகர் அவனுக்குப் பதில் சொல்லவில்லை. நிதானமாகச் சட்டையைக் களைந்து விட்டு அமைதியாக உறங்குவதற்கான ஏற்பாடுகளில் மூழ்கியிருந்தான். ஆனாலும் நண்பன் கோபாலின் தூங்காததற்கான காரணங்களைக் கேட்பதற்குக் காதுகளைத் தயாராக்கி வைத்திருந்தான்.

''இந்தப் பண்ணை விவகாரங்கள் எல்லாமே ஒரே மர்மமும் பயங்கரமுமாக இருக்கின்றன. முதலில் ராமு திடீரென்று காணாமல் போயிருக்கிறான், பாலு குரூரமாகக் கொலை செய்யப்பட்டிருக்கிறான். அதையடுத்து நிர்மலா, இப்போது டாக்ஸிக்காரன் காளியப்பவின் கதி என்னவென்று தெரியவில்லை. இவர்களைத் தவிர இரண்டு பேர் நோயாளிப் படுக்கையிலிருந்து இயற்கையாக மரணமடைந்திருக்கிறார்கள். இன்னும் மூன்று பேர் கொல்லப்பட இருக்கிறார்கள்.:... இந்த நிலையில் என்னால் எப்படி இங்கு நிம்மதியாகத் தூங்க முடியும்? யாரோ ஒரு கொலைகாரன் தன்னிச்சையாகத் திரிந்து கொண்டிருக்கிறான், இந்தப் பிராந்தியத்தில். அவனுக்கு நம்மீது கருணையோ, அன்போ உண்டாகும்படி செய்ய நம்மால் இயலாது... என்ன சேகர், நான் சொல்வது புரிகிறதா? உனக்கும் உன் காதலிக்கும் ஏதாவது ஆபத்து நேரும் சாத்தியக் கூறுகள் இருக்கின்றன. அதை அறிந்தும் நாம் அசட்டையாக இருக்கக் கூடாது. நீ வேண்டுமானால் தூங்கு. உங்கள் இருவருக்கும் காவலாக நான் விழித்துக் கொண்டுதான் இருக்கப் போகிறேன். எதற்கும் தற்காப்புக்காக உன்னிடமுள்ள கைத் துப்பாக்கியை என்னிடம் கொடு'' என்றான் கோபால்.

இத்தனை வியாக்கியானங்களுக்குப் பிறகும்கூட சேகர் அவனுக்குப் பதில் சொல்லவில்லை. கோபாலின் கண்களில் தூக்கம் போய் விட்டது என்பதைக் கண்டான் அவன். ஆனாலும் அது வெகு தூரத்துக்குப் போய் விடவில்லை, விரைவிலேயே அது அவனை ஆட்கொண்டு ஆட்சி செய்ய வந்துவிடப் போகிறது என்பதும் அனுபவசாலியான அவனுக்குத் தெரியும். ஆகவே மௌனமாகத் தன் கைத் துப்பாக்கியை எடுத்து அவனிடம் நீட்டி விட்டுத் தன் அறைக்குச் சென்றான் படுப்பதற்காக. படுக்கையில் படுத்துத் தலையணையில் சொகுசாகத் தலையை அழுந்த வைத்துக் கொண்டு கண்களை மூடினான்.


"நீங்க உங்க ஆபீசிலே வாரத்தில் ஐந்து நாட்கள் வேலை வேண்டுமென்று போராடறீங்க! இங்கு முனியம்மா வாரத்தில் ஐந்து நாட்கள் விடுமுறை கேட்கிறாள்! என்ன சொல்ல?"

இரவின் இரண்டாம் ஜாமத்தில் கோபால் முழங்கால்களைக் கட்டிக் கொண்டு உறக்கம் கைவிட்ட ஒரு நிலையில் உட்கார்ந்திருந்தான். அவனது கைக்கெட்டும் தூரத்தில் சேகரின் கைத் துப்பாக்கி வைக்கப் பட்டிருந்தது.

**வே**ப்ப மரத்துப் பங்களாவில் சேகர் படுத்திருந்த அறையின் கதவு ஓசையின்றித் திறந்தது. அதன் வழியே சேகரின் தலை மட்டும் கூடத்தை எட்டிப் பார்த்தது. அவன் முகத்தில் அசதி கலைந்து, புதிய தெம்பு கூடியிருந்தது. அவன் அதற்குள் தூங்கி விழித்துக் கொண்டு விட்டான். நல்ல அமைதியான தூக்கமானால் சிறிது நேரம் தூங்கினாலே போதுமே. கூடத்தை நோட்டமிட்ட சேகரின் கண்களில் சிரிப்பு மலர்ந்தது. அவனையும் மஞ்சுளாவையும் அபாயம் அணுகாமல் காவல் காக்கப் போவதாகச் சவால் விட்ட கோபால் அவன் உட்கார்ந்திருந்த அதே நிலையில் சோபாவில் சரிந்து கிடந்தான். அவன் முகவாய் அவனது முழங்கால் முட்டிகளின் மீது பதிந்திருந்தது! பாவம், நல்ல ஆழ்ந்த உறக்கம்! தனக்குள் சிரித்துக்கொண்டே பூனைபோல் நடந்து மஞ்சுளாவின் அறையை எட்டிப் பார்த்தான். அவளும் அயர்ந்து உறங்குவதை உறுதி செய்து கொண்ட சேகர், கோபாலின் அருகில் வந்து அவனது தோள்களைத் தொட்டு அசைத்தான். அது, அந்த ஸ்பரிசம் கோபாலின் உடலின் மீது, மின்விசையாக வேலை செய்தது. கண்களைத் திறப்பதற்குள் அவன் கைகள் துப்பாக்கி இருக்குமிடத்தைத் துழாவியபடி தவித்தன. தாக்க வருபவனை எதிர் பார்த்து எதிர்க்கும் பழக்கமுள்ளவனாயிற்றே. உடற் பயிற்சிக் கழகத்தின் வாத்தியாரல்லவா?

சேகர் தாழ்ந்த குரலில் அவனது படபடப்பைத் தவிர்த்தான். "டேய், கோபால், தூங்குமூஞ்சி! நான்தாண்டா சேகர்" என்றான். அதன் பிறகு தான் அவன் உடலில் ஒரு தொய்வும் நிதானமும் ஏற்பட்டன. கண்களைக் கசக்கிக் கொண்டே எழுந்திருந்த கோபாலின் தோள்மீது தன் கையைப் பதித்தபடி வாசல் கதவைத் திறந்து கொண்டே வெளியே நடைபாதைக்கு அழைத்துப் போனான் சேகர். இரவின் அமைதியான குளிர் காற்று அவனது நீல நிறப் பைஜாமாவைப் படபடக்க வைத்துக் கொண்டிருந்தது.

"டேய், உனக்குக் கார் ஓட்டத் தெரியுமில்லையா?" என்று கேட்டான் கோபாலிடம்.

"என்னப்பா அப்படிக் கேட்டுட்டே? உனக்குத் தெரியாதா? காரைக் குடுத்துப் பாரு" என்றான் ரோசத்துடன் கோபால். அவனுக்கும் தெரியும் சேகர் தமாஷ் செய்கிறான் என்று.

"அன்று மஞ்சுளா ஓட்டினாளே, அந்தக் காரை எடுத்துக்கோ, ஷெட்டிலேதான் இருக்கும். கார் சாவி 'இக்னிஷன் போர்டி'லே இல்லேன்னா அந்த 'டூல் ரூம்'லே உள்ள 'கீ-போர்டி'லே இருக்கும். சாமுண்டிக் கோட்டைக்குப் போ. இன்றைய இரவின் மீதிப் பொழுதை நீ அங்கேதான் கழிக்க வேண்டும்" என்றான் சேகர்.

"எதற்காக? உன்னையும் மஞ்சுளாவையும் பாதுகாப்பில்லாமல் இங்கு தனியே விட்டு விட்டு நான் எங்கும் போக மாட்டேன், புரிந்ததா?" என்றான் கோபால்.

"நல்லாப் புரியுது. எங்கள் 'பாடிகார்டு' குறட்டை விட்டபடி தூங்கியதை நானும் பார்த்தேனே! எங்களுக்கு எவ்வித ஆபத்தும் வராது. நாங்கள் பத்திரமாக இருப்போம். நான் சொல்கிறபடி செய். இது ஒரு முக்கிய



திருத்தணிகை
ஸ்ரீ சுப்ரமண்யஸ்வாமி

# ஆடிக் கிருத்திகை
# தெப்போற்சவப் பெருவிழா

**14-8-71 முதல் 16-8-71 முடிய**

○★○

## 14-8-71 ஆடிக் கிருத்திகை

பல்லாயிரக்கணக்கான பக்தர்கள் புஷ்பக் காவடி செலுத்துதல் கண்கொள்ளாக் காட்சி.

ஆயிரமாயிரம் மக்கள் முடிகாணிக்கை கொடுத்தல் இத்தலத்தின் தனிச்சிறப்பு

ஐந்தாவது படைவீடான தணிகையில் அழகன் குமரனைக் கண்டு அவனருள் பெற்றுய்ய வாருங்கள்.

தேவஸ்தான நிர்வாகிகள்
திருத்தணிகை

---

தேவஸ்தான நிலையங்களிலேயே தலைமுடி காணிக்கை செலுத்த வேண்டுகிறோம்

# பயர்ஸ்டோன் படைத்திடும் மிக வலிமையான டயருக்கு ஈடுநிற்குமா உங்கள் கார் டயர்கள்?

ஓட்டுவதற்கென மிகக் கண்டிப்பான தேவைகளை கருத்திற்கொண்டு உருவாக்கப்பட்ட டயர் இது. காடுமுரடான சாலைகளிலும் சுகமாக ஓடக்கூடிய டயர். கோடை வெப்பத்திற்கு ஈடுகொடுக்கக் கூடிய டயர். மழைபெய்த ஈரச் சாலைகளிலும் பாதுகாப்புத் தரும் டயர். அடிக்கடி நிறுத்தி நிறுத்தி ஓட்டும் கடுவினைகளுக்கு நன்கு தாக்குப் பிடிக்கும்.

இத்தகைய உறுதியை நீங்கள் ஒரு பயர்ஸ்டோன் டயரிலே பெறக் காரணம்: அதற்கென்றே உரித்தாக அமைந்த மும்மடங்கு வலிமையுள்ள கட்டுமானம்—டயருடன் டிரெட்டை ஒட்டிப் பிணைக்கவும், பக்கவாடுகளைப் பலப்படுத்தவும், கார்டுகளை இன்சலேட் செய்வதற்குமான தனிப்பட்ட முறை இது.

கொடுக்கும் பணத்திற்குக் கூடுதலான கிலோமீட்டர்களும், அதிகப் பாதுகாப்பும் வேண்டுமானால் உங்களுக்குத் தேவை பயர்ஸ்டோன் படைத்திடும் **வலிமையான டயர் தான்.**

**40 ஆண்டுகளுக்கு மேலாக நம் நாட்டுக்குப் பணிபுரிவது.**

FOCUS W-34(C) TH

# பயர்ஸ்டோன்



**இந்தியாவெங்கும் வாங்கக் கிடைக்கிறது—இன்றே காண்க உங்கள் பயர்ஸ்டோன் விற்பனையாளரை.**

மான காரியம். டாக்டர் ரகுநாத்தின் வீடு எங்கே என்று கண்டுபிடி. அவர் வீட்டுக்கு அருகே அதைக் கண்காணித்த படி இரு. நீ கண்காணிப்பது பிறருக்குத் தெரியாத வகையில் நடந்துகொள். என்ன புரிந்ததா?''

''அது சரி, டாக்டர் ரகுநாத்... எப்படிப்பட்டவர்... உன் கவனம் அவர் மீது திரும்பி யிருப்பது நல்லதுக்கு இல்லேயே!''

''இரவு வேளேகளில் அவருக்கு அழைப்புக்கள் வரலாம். டாக்டர் இல்லேயா? அப்படி அவருக்கு அழைப்புக்கள் வந்து அவர் வெளியே கிளம்பினுல் அப்போது சிரமப்படாதே. அவரைத் தொடர்ந்து போய்க் கண்காணிக்க வேண்டாம். ஆனுல் அவர் தனியாகப் போகாமல் வேறு யாருடனுவது வெளியே கிளம்பினுல்தான் உனக்கு வேலே'' என்ருன் சேகர்.

''நான் தூங்கினதுக்குச் சரியான தண்டனே குடுத்துட்டே'' என்று கூறியபடியே கடமையை நிறைவேற்றக் கிளம்பினுன் கோபால். சற்று நேரத்துக்கெல்லாம் 'டாப்லெஸ்' கார் ஒன்று சாமுண்டிக் கோட்டைக்குப் போகும்' ரஸ்தாவில் ஊர்ந்து செல்வதை அங்கிருந்தபடியே பார்த்து விட்டு மறுபடியும் உள்ளே போனுன் சேகர், விட்ட தூக்கத்தைத் தொடர.

கீழ்வானத்தில் செம்மை கலந்த சாம்பல் நிறத்தில் வர வர ஒளி கூடிக் கொண்டிருந்தது. விடியற்காலே நேரம். சேகர் படுக்கையிலிருந்து எழுந்திருந்த அப்போதும் கூடக் கோபால் திரும்ப வில்லே. சேகர் தன் இரவு உடையைக் களேந்து சாதாரண உடை மாற்றிக் கொண்டு தயாரான அப்போதும் மஞ்சுளா நன்ருக அயர்ந்து தூங்கிக்கொண்டிருந்தாள். அவளே எழுப்ப மனமில்லே அவனுக்கு. பாவம், அவளுக்கு — அவள் உள்ளத்துக்கும் உடலுக்கும் ஓய்வு தேவை. வேப்ப மரத்துப் பங்களாவிலிருந்து வெளியே வந்தான். தூரத்தில் — பண்ணேயின் பிரதான பங்களாவின் — பின்பக்கத்தில் விளக்குகள் எரிந்து கொண்டிருந்தன. 'காவேரி தன் அன்ருடக் காரியங்களேத் தொடங்கி விட்டாள் போலிருக்கிறது' என்று நினேத்துக் கொண்டான் சேகர். அந்த வெளிச்சத்தை நோக்கி அவன் கால்கள் நகர்ந்தன. சமையலறைப் பின்புறக் கதவை அவன் கைகள் தள்ளித் திறந்தன.

இம்மாத முழுநாவல்:

ருக்மிணி பார்த்தசாரதி எழுதும்

# அழகுமயம்

''காவேரியம்மா, காலே வணக்கங்கள்!'' என்ருன் சேகர்.

காவேரியின் கனிவான பார்வை அவன் மீது விழுந்தது. அவளது பெரிய விழிகள் இன்னும் விசாலமாயின. ''வாங்க, ஐயா...! காலே ஆகாரம் இதோ இன்னும் கொஞ்ச நேரத்திலே தயாராகிவிடும்'' என்ருள்.

''காவேரியம்மா, நான் காலே ஆகாரம் சாப்பிட வரவில்லே. ஒரு முக்கியமான விஷயத்தை உன்னிடம் கேட்டுத் தெரிந்துகொண்டு போகவே வந்தேன்.''

''என்னய்யா, கேளுங்க. எனக்குத் தெரிந்தால் கட்டாயம் சொல்கிறேன்.''

''என் வாழ்க்கைக்கு மிக மிகத் தேவையான விஷயம் இது'' என்ற சேகரின் முகத்தில் வரியிட்ட நாணத்தைக் கண்டு காவேரிக்கு வியப்பாக இருந்தது.

''மஞ்சுளாவுக்குச் சமைக்கத் தெரியுமா காவேரியம்மா?''

தன் வருங்கால மனேவிக்கு வாய்க்குச் சுவையாகச் சமைத்துப் போடத் தெரியுமா என்பதில் கவலே கொண்டிருக்கிருன் கணவன் என்பதை அறிந்ததும் காவேரியின் முகத்திலும் செம்மை படர்ந்தது.

''பண்ணேயாரோட செல்லப் பெண்ணுச்சேன்னு சந்தேகப் படறீங்களா?... மஞ்சுளாக் கண்ணு எதுக்காக அடுப்படிலே அவதிப்படணும்? ஆனு அந்தப் பொண்ணு அப்படி இருக்காது. இங்கே தங்கி யிருக்கிறபோதெல்லாம் அது இங்கேதான் என்னேச் சுத்திக்கிட்டே

இருக்கும். அது எப்படி, இது எப்படின்னு நான் செய்யற ஒவ்வொரு காரியத்தையும் கத்துக்கும். அதுக்குத் தெரியாத சமையல் விஷயமே கிடையாது. ஆனால் தானே செய்து சாப்பிடச் சந்தர்ப்பம் வரல்லே. வந்துதுன்னா ஜமாச்சுப்புடும். எங்க மஞ்சுவுக்குக் கை மணம் உண்டு. காப்பி போட்டுக் கொடுக்கச் சொல்லுங்களேன். எப்படிக் கமகமன்னு மணக்கும் தெரியுமா?'' என்று தன் குட்டி எஜமானியின் புகழ் பாடினாள் காவேரி.

''அப்படின்னா உங்க சின்ன எஜமானியம்மாவோட கைமணத்தை இன்னிக்குப் பார்த்துப்பிடறதுன்னு இருக்கேன். வேப்ப மரத்துப் பங்களாவிலே தான் இன்னிக்கு எனக்குச் சாப்பாடு. அமைதியான அந்த இடத்திலே அழகே உருவான உங்க வீட்டுப் பொண்ணு ஆக்கிப் போடறதைச் சுவைச்சுச் சாப்பிடணும்னு ஓர் ஆசை... உங்களுக்குத் தான் தெரியுமே, கோழிக் கறின்னா எனக்கு ரொம்பப் பிடிக்கும். அதனாலே அதுக்கு வேண்டியதையும், மற்ற சமையல் பதார்த்தங்களையும் கட்டிக் கொடுங்க பார்க்கலாம்'' என்றான்.

''அதுக்கென்ன தரேன். ஆனா குழந்தையை ஏங்க சிரமப்படுத்தணும்? தாத்தாவையும் அப்பாவையும் பறிகொடுத்துட்டு நிக்குது..?'' என்றாள் காவேரி.

''அந்தத் துக்கத்தை மறக்கத் தான்னு வச்சுக்குங்களேன் இதெல்லாம்'' என்று கண் சிமிட்டினான் சேகர். அவர்களின் அந்தரங்கத்தைக் கெடுக்க வேண்டாம் என்று காவேரி அதற்குப் பிறகு தடை ஏதும் சொல்லவில்லை. பெரிய குளிர்பதனப் பெட்டியிலிருந்து சமையலுக்குத் தயாராகப் பதப்படுத்தி வைக்கப்பட்டிருந்த கோழி, மற்றும் பட்டாணி, முட்டை முதலியவைகளை எடுத்தாள். அவைகளை ஒரு பேப்பர் பையில் போட்டுக் கட்டினாள். கூடவே வெங்காயம், உருளைக் கிழங்கு, வெண்ணெய் எல்லாவற்றையும் ஒரு தூக்குப் பாத்திரத்தில் வைத்துக் கொடுத்துக் கொண்டே, ''ஐஸ் பெட்டிக்குள்ளே இருந்ததாலே இவைகளைச் சமைக்கிறதுக்கு முன்னாலே கொஞ்ச நேரம் வெளியே வைச்சிருக்கணும். அப்பத்தான் பதமா பக்குவம் செய்ய வரும். இது மஞ்சுளாவுக்குத் தெரியும். வேப்ப மரத்துப் பங்களா சமையல் கட்டிலே தேவையான மற்ற உபகரணங்களெல்லாம் இருக்கு. மஞ்சுளாவோட தயாரிப்பு முன்னே பின்னே இருந்தாக்கூட ஐயாவுக்கு எல்லாமே ருசியாத்தானே இருக்கும். வயசு அப்படி!'' என்று மறுபக்கம் திரும்பிச் சிரித்துக் கொண்டாள் காவேரி.

''மஞ்சுளாவோட தயாரிப்பை உங்களுக்கும் அனுப்பி வைக்கிறேன்....'' என்று கூறி விடைபெற்றுக் கொண்டு வெளி வந்தான் சாமான் தூக்குடன் சேகர். அதே சமயம் சரளைக் கல் பாதையில் உருண்டு வரும் கார்ச் சக்கரங்களின் கலகல ஒலி கேட்டது. கோபால் காரை அதன் காரேஜில் விட்டு விட்டு வேப்ப மரத்துப் பங்களாவுக்குச் செல்லும் பாதையில் வருவதற்கும் சேகர் அவனோடு சேர்ந்துகொள்ளுவதற்கும் சரியாக இருந்தது.

''எதுவும் நிகழவில்லை சேகர். இரவு முழுவதும் கண் கொட்டாமல் உட்கார்ந்திருந்ததுதான் மிச்சம்'' என்றான் கோபால்.

''எதுவுமே நடக்கவில்லையா?''

''டாக்டர் ஒரு முறைகூட வெளியே வரவில்லை.''

''ம்...நல்லது... அது சரி, கோபால், அவர் வீட்டைக் கண்காணித்துக்கொண்டிருந்தாயே, சுவையான செய்தி ஏதுமே கிடைக்கவில்லையா உனக்கு?''

''ஊஹூம்.... அவரும் என்னைப் போலவே தூங்கவில்லை.. அழைப்புக்கள் வராதபோதும் அவர் கண்ணயரவில்லை. மாடியில் அவர் படுக்கை அறையில் வெகு நேரம் வரை விளக்கு எரிந்து கொண்டிருந்தது.''

''ஓ....'' என்று ஏதோ யோசனையாகப் பதில் அளித்தான் சேகர். இதற்குள் இருவரும் வேப்ப மரத்துப் பங்களாவுக்கு வந்துவிட்டிருந்தனர். சப்தம் செய்ய வேண்டாம் என்று சைகை மூலம் காட்டினான் கோபாலுக்கு. இருவரும் ஓசைப்படாமல் உள்ளே நுழைந்தார்கள். மஞ்சுளாவின் அறை ஜன்னல் வழியே மெள்ள எட்டிப் பார்த்தான் சேகர். அவள் இன்னும் அயர்ந்து தூங்கிக் கொண்டுதான் இருந்தாள்.

சேகர் சமையலறைக்குச் சென்று தான் கொண்டு வந்தவைகளை எடுத்து மேஜை மீது பரப்பினான். முக்கியமாகக் கோழியை! கல்லிலிருந்து செதுக்கி எடுத்தது போல அத்தனை உறுதியாகக் குளிர்பதனப் பெட்டியில் இருந்ததால் உறைந்து கிடந்தது அது. சமைக்கத் தகுதியான இளகிய நிலையை அடைய அதற்கு இன்னும் வெகு நேரம் பிடிக்கும்.

சேகர் சமையலறைக் கதவை மூடி விட்டு ஹாலுக்கு வந்தான். அவன் முகத்தில் அதிதமானதோர் எண்ணக் கலவை படர்ந்திருந்தது. (தொடரும்)

# ஒரே இனம்: ஒரே மக்கள்



"ஒரே கொடியின் கீழுள்ள ஒரே நாட்டு மக்களிடையே நிறைய ஒற்றுமை இருக்கிறது. நாட்டின் மது ஒன்றாக மெய்ப்பற்றுக் கொண்டு, இந்தியா ஒரே நாடு என்று நம்புகிறவர்களிடம் சிறுபான்மையோர் அல்லது பெரும்பான்மையோர் என்னும் பிரச்சினையே எழ முடியாது. எல்லோரும் சமமான சலுகைக்கும் சமமாக நடத்தப்படுவதற்கும் உரிமை உடையவர்கள். நமது கருத்திற்கிசைந்த நாடு, அதன் ஒவ்வொரு அங்கமான பிரதேசங்களுக்கிடையே முற்றிலும் ஒற்றுமையுள்ள மதச்சார்பற்றதாயிருக்க வேண்டும்; குடியரசு நாடாகவும் இருக்க வேண்டும்."— மகாத்மா காந்தி






இண்டியன் ஆக்ஸிஜென் லிமிடெட்

# ''வெளியிலேயே இரு!''



**பி**ச்சுவுக்கு எதிலுமே வேகம் அதிகம்.

பிச்சுவுக்குப் படிப்பில் வேகம், பேச்சில் வேகம், நடையில் வேகம்.

பிச்சுவுக்குப் பசியும் அதி வேகமாக எடுக்கும்.

குருகுலத்தில் தன் நுருநுருப்பைப் புத்தியால் நூறாயிரம் கேள்விகளை எழுப்பி அத்யாபகரை அவஸ்தைப்படுத்திவிட்டு, பிறகு தானே அந்தக் கேள்விகளுக்கு விடையும் கண்டு பிடித்துத் திருப்தி அடைந்த பிச்சுவுக்கு இப்போது பசி வேகம் வந்தது.

இளம் பசிக்காரனுன பிச்சு 'வேகு வேகு' என்று குருகுலத்திலிருந்து வீட்டுக்கு வந்தான்.

புயல் போல் சமையலறைக்குள் பிரவேசிக்க இருந்த அவனை அதட்டித் தடுத்தாள் அன்னை.

அன்னை குரலை உயர்த்தவில்லை. மெல்லிய குரலிலேயே, ஆனால் கண்டிப்புடன், ''வெளியிலேயே இருடா, பிச்சு!'' என்று உத்தரவு போட்டாள்.

சண்டமாருதத்தைப் பிடித்து நிறுத்தினாற் போல் பிச்சு நின்றான்.

''குழந்தை பெரியவளாயிருக்காளாம். உன் வேட்டகத்துக்காரா சுபச் சேதி சொல்லி, என்னை அழைத்துப் போக வந்திருக்கா. பெண்டுகள் சமையல் உள்ளே இருக்கா. அதனாலே தான் உன்னை வெளியே நிற்கச் சொன்னேன்'' என்று முகமலர்ச்சியுடன் கூறிய அன்னை, எரிச்சலை உள்ளடக்கிக் கொண்டு ரகசியக் குரலில், ''இன்னிக்கு ஒரு நாள் பசியோ பசின்னு பிராணனை வாங்காதே. விருந்து தயாராகித்தான் சாப்பிடணும்'' என்று கண்டிப்பாகச் சொல்லி விட்டு உள்ளே மறைந்தாள்.

பிச்சுவுக்கோ வயிற்றைக் கிள்ளியது. இப்போது அம்மா தன் மனசையும் கிள்ளிவிட்டது போல் ஆத்திரம் வந்தது.

ஆனாலும் அடித்த சிலையாக அங்கேயே நின்றான்.

முதலில் ''வெளியிலேயே இரு'' என்று அம்மா சொன்னது மீண்டும் மீண்டும் செவியில் ஒலித்தது.

உள்ளேயிருந்து பருப்பு வேகிற நெடி வந்தது. இதோ 'நெடி' மாறி, 'நறுமண'மாயிற்று. ஆமாம், சப்பென்று வெந்த பருப்பில் அம்மா உப்பைப் போட்டிருக்கிறாள். அதுதான் திடீர் மணத்துக்குக் காரணம். பிச்சுவின் பெண்டாட்டி இத்தனை நாள் குழந்தையாக இருந்தாள். இப்போது ரிதுமதியாகி விட்டாள். சமையல் அறைக்கு வெளியே அம்மா நிற்கச் சொன்னாளே! **அங்கேயும்** வெளியே நின்று விட்டால் என்ன?

வெண்ணெய் எடுத்த மோரைக் குழப்பும் மணம், பாகு கொதிக்கிற மணம், தாளிதப் பண்டங்களின் மணம் இத்தனைக்




ஆம், அது ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதிகளான ஸ்ரீபரமசிவேந்திர சரஸ்வதி சுவாமிகள் முகாமிட்டிருந்த புண்ணிய பூமி.

ஸ்ரீசங்கராசாரிய சுவாமிகளின் முன் தண்டமென விழுந்து தண்டனிட்டான் பிச்சு.

ஏனோ தெரியவில்லை, அவனுக்குச் சமுத்திரத்தைத் திறந்து விட்டாற்போல் கண்ணீர் பெருகிக்கொண்டேயிருந்தது.

"வந்தாயா, அப்பனே!" என்று அருளோடு வரவேற்பு தந்தார் ஆசாரியேந்திரர்.

அவனா வந்தான்!

சம்ஸ்காரம் அவனைப் பிடரி பிடித்து உந்தித் தள்ளி வந்திருக்கிறது! அல்லது ஈசுவர கிருபை என்ற அலை அவனைப் புரட்டிக் கொண்டு வந்திருக்கிறது!

"ஸ்வாமி, இனி நீங்கள் தான் எனக்கு எல்லாம்" என்றான் பிச்சு.

"அவாவாளுக்கும் அவாவாளே எல்லாமும்" என்று அத்வைதத்தைக் குழந்தைமொழியாகச் சொன்னார் ஆசாரியர்.

"ஆனாலும் அந்த நிலை அனுபவத்தில் வருகிற மட்டும் வெளியே அவனை நிறுத்தி வைத்திருக்கிறான் அன்னை. மண வாழ்வுக்கு வெளியிலேயே நின்றுவிட்டால் என்ன?

# ரா. கணபதி

பிச்சுவுக்கு ஏதோ ஓர் அச்சம் ஏற்பட்டது.

'ஊஹூம்; இதில் சிக்கிக் கொள்ளவேமாட்டேன்' என்று தன் தலையை உதறிக் கொண்டான் அவன்.

உபாத்தியாயரின் கண்ணில் விரலைக் கொடுத்து ஆட்டி அவன் கற்றுக் கொண்ட வேத, வேதாந்த சாஸ்திரங்கள் அனைத்தின் சாரமான உபதேசம் அப்படியே திரண்டு வந்து அவனை உருட்டித் தள்ளியது.

'ஊஹூம், சாரமற்ற சம்சாரத்தில் ஒரு நாளும் சிக்கமாட்டேன்' என்று சத்தியம் செய்து கொண்டான் பிச்சு.

அடுக்களைக்கு வெளியே நின்றவன், வீட்டுக்கு வெளியே நடக்கலானான். தனக்கே உரிய வேகத்துடன் விரு விருவென்று நடக்கலானான். 'இந்தப் பாழாய்ப் போன வேகம் என்றாவது அடங்க வேண்டும்' என்று சபித்துக் கொண்டே மேலும் மேலும், இன்னும் மேலும் நடந்து கொண்டேயிருந்தான்.

* * *

அவன் கால் இற்று விழுகிற நிலை. எங்கே வந்து அவன் விழ வேண்டும் என்று விதி திட்டமிட்டிருந்ததோ அங்கு வந்து விழுந்தான். வாழ்க்கையில் விழுந்தவர்களைத் தூக்கி நிறுத்தும் தூய இடம் அது.

டும் ஆசாரியரின் ஆசிரயத்தில்தானே இருக்கணும்?" என்றான் பிச்சு. பழைய 'வேகம்' மீண்டும் வரத் தொடங்கிவிட்டது.

"இரேன்" என்றார் ஆசாரியர்.

பரமசிவேந்திர சரஸ்வதிகளிடம் பரம சிஷ்யராக அமர்ந்து விட்டார் சிவராம கிருஷ்ணன்.

* * *

பிச்சுவின் இயற்பெயர் சிவராமகிருஷ்ணன். அவரது காலத்தைப் பற்றிச் சர்ச்சை உண்டு. பதினாறும் நூற்றாண்டா, பதினெட்டாம் நூற்றாண்டா என்று வாதப் பிரதிவாதங்கள் உண்டு. அவர் பிறந்த இடத்தைப் பற்றியும் சர்ச்சை உண்டு. மதுரையா, திருவிசநல்லூரா என்று சர்ச்சை செய்வார்கள். அவர் இயற்றிய கிரந்தங்களிலெல்லாம் தமது குருவான பரமசிவேந்திரரைத் துதித்திருக்கிறார். அந்த குரு கனவில் அருளியது பற்றி, "ஸ்வப்னோதிதம்" என்றே ஒரு தனி நூலும் செய்திருக்கிறார். ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடத்தின் ஐம்பத்தேழாவது ஆசாரிய ஸ்வாமிகள் பரமசிவேந்திர சரஸ்வதி என்ற திருநாமம் பூண்டவர்கள். விஷ்ணு, லலிதை, சிவபெருமான் ஆகிய ஸகுண மூர்த்திகளின் மீது ஸஹஸ்ரநாமம் இருப்பது போல், நிர்க்குணமான பரப் பிரம்மத்தின் மீது ஒரு ஸஹஸ்ரநாமத்தைத் தொடுத்தவர் இந்தப் பரமசிவேந்திரர்கள் — உபநிஷதங்களில் உள்ள

பிரம்மவாசகமான நாமங்களில் ஆயிரத்தை இவ்வாறு தொகுத்து வியாக்கியானம் செய்திருக்கிறார். அந்த மகானே நம் கதாநாயகரின் குரு என்று கொள்வதற்கு எள்ளளவும் சந்தேகம் வேண்டியதில்லை. தவிரவும் ஆதி சங்கரரிலிருந்து தொடங்கிப் பரமசிவேந்திரர் வரையில் அருளாட்சி செய்த ஐம்பத்தேழு காமகோடி பீடாதிபதிகளையும் பற்றிய 'குரு ரத்ன மாலா' என்ற கிரந்தம் பல தலைமுறைகளாக நமது கதையின் நாயகர் செய்ததாகவே வழங்கி வருகிறது. நமது கதாநாயகர் ஜீவன் முக்தர் என்பதோடு அற்புத சித்தராகவும் இருந்ததால் நூற்றாண்டுக் காலத்துக்கும் அதிகமாக வாழ்ந்திருக்கக் கூடும். எனவே தான் இவரது சரிதத்தில் காலத்தால் மிகுந்த இடைவெளியில் உள்ளவர்கள் சம்பந்தப்பட்டிருக்கிறார்கள்.

ஜீவன் முக்தரானது, சித்தரானது பிற்பட்ட கதை. அப்போது அவருக்குக் குலம் கோத்திரம் இல்லை. ஆனால் முதலில் ஓர் ஆந்திரப் பிராமணக் குடும்பத்தின் வழித் தோன்றலாகப் பிறந்து வாழ்ந்தார். அதி சுட்டிகையான சிறுவராக இருந்தார். தந்தை ஸோமநாத அவதானிக்கும், அன்னை சாந்த பார்வதிக்கும் அருமைப் புதல்வராகி, வேண்டிய விஷமங்கள் செய்தார். உபநயனம், அத்தியயனம் எல்லாம் முறைப்படி நடந்தன. பின்னைப் பிராயத்திலேயே கல்யாணமும் ஆயிற்று. கலியாணம் என்பது ஒரு நாலு நாள் விளையாட்டாகத்தான் இருந்தது. கலியாணம் ஆன கையோடு அதை மறந்தும் போனான் 'பிச்சு'. கல்வியில் அபார ஈடுபாடு இருந்ததால் வேறு எதிலுமே மனம் போகவில்லை. திடீரென்று ஒரு நாள் தான் கலியாணமானவன், தனக்கு மனைவி உண்டு, அவளுடன் இல்லறம் தொடங்கத் தருணம் வந்து விட்டது என்று அறிந்த போது இடி விழுந்த மாதிரி ஆயிற்று. காவியங்களில் எந்த ஒரு தருணத்தை உவகையின் எழுச்சியாகச் சொல்கிறார்களோ, அதுவே பிச்சுவுக்குப் பிரதிகூலமாக, அருவருப்பாக ஆயிற்று. அதிலிருந்து தப்பிக்க ஓடினான். ஆசாரியர்களை வந்து அடைந்தான்.

சிவராமகிருஷ்ணனுக்காகவே காத்திருந்தது போல் அவர் ஆசிரயம் அளித்து, சந்நியாச ஆசிரமமும் வழங்கி விட்டார் !

சிவராமகிருஷ்ணன் சதாசிவ பிரம்மேந்திர சரஸ்வதியாக மாறினார் !

ஸ்ரீ மடத்திலே பண்டிதர்கள் குழுமியிருப்பார்கள் அல்லவா? வேதாந்த விசாரங்களும், வாக்யார்த்தமும், பாஷ்ய பாடமும்—நிறைந்த அந்தச் சூழலில் சதாசிவப் பிரம்மத்தின் அறிவு கொழுந்து விட்டெரிந்தது. அவரது சிந்தனையிலும் சொல்லிலும் ஒரே வேகம். எதிர்க் கருத்துக்காரர்களோடு ஓயாத வாதப் போர்.

வெற்று அறிவு வாதத்தால் எதைத்தான் சாதிக்க முடியாது? ஆனால் அது உண்மை சாதனைதானா? எதிராளிகளின் கேள்விகளை வாதத்தால் அடக்கிவிடலாம். ஆனால் உள்ளுக்குள்ளேயே எழுகிற கேள்விகளை அநுபவம் ஒன்றே அல்லவா அடக்கும்? "வெல்லாமல் எவரையும் மருட்டிவிட வகை வந்த வித்தை என் முக்தி தருமோ?" என்று தாயுமானவர் பாடிய, முக்திக்கு உதவாத, நிலையில்தான் அப்போது இருந்தார் சதாசிவப் பிரம்மம்.

மடத்தின் வெளித் திண்ணையில் அதிஉக்கிரமாக வாதப் போர் செய்து கொண்டிருந்தார் சதாசிவர்.

உள்ளே பரமசிவேந்திரர்கள் தமக்குள் சிரித்துக் கொண்டார். 'அறிவின் பெருமை இந்த வாலிபனுக்கு மிக அதிகமாயிருக்கிறது. இப்படியே போனால் அநுபவத்தில் தோயமாட்டான்' என்று எண்ணினார்.

சிஷ்யனை வரவழைத்துக் கொண்டார்.

"சதாசிவா, உன் வாய் மூடவே மூடாதா?" என்றார் கர்ஜனைக் குரலில்.

சிம்மம் உறுமியது. மத்தயானை அப்படியே அடங்கி விழுந்து விட்டது.

"அன்று அன்னை சொன்ன ஒரு சொல் அவரை வீட்டைவிட்டு வெளியே அனுப்பியது.

இன்று ஆசான் சொன்ன ஒரு சொல் அவரைச் சொல்லுலகிலிருந்தே வெளியே அனுப்பி விட்டது.

ரோஷமுள்ள காளைக்கு ஒரு சூடு என்பார்கள்! சதாசிவப் பிரம்மத்துக்கும் அப்படித்தான் !

சதாசிவ பிரம்மம் அன்றே கடும் மௌனத்தை மேற்கொண்டு விட்டார்.

"சும்மாயிரு, சொல்லற" என்று முருகப் பெருமான் தமக்கு உபதேசித்ததையும், உடனே விளக்கவொண்ணா அநுபூதியில் தாம் திளைத்ததையும் அருணகிரி பாடுகிறார். "ஆசா நிகளம் துகளாயினபின் பேசா அநுபூதி பிறந்ததுவே" என்றார் அதே அருணமுனி. "மோனம் என்பது ஞான வரம்பு" என்றாள் அவ்வை. ஆசை அனைத்தையும் எரித்தபின், ஞானநிலையின் உச்சியில் தானாகவே பிறக்கும் மோனத்தை அவர்கள் சொன்னார்கள். ஆனால் சதாசிவரின் மௌனம் அப்படிப்பட்டதல்ல. 'வாதம் புரிய வேண்டும், எதிர்க்கட்சியினரை வெல்ல வேண்டும்' என்ற ஆசைகள் குமுறிக் கொண்டிருந்த போதே, வலுக் கட்டாய மௌனத்தை மேற்கொண்டார் சதாசிவர். பூரண ஞான நிலையை அடையாத சாதகர்களின் மௌன விரதத்துக்கும் ஒரு பெருமை உண்டு. இவர்களுக்கு மௌனமே முழுமை நிலைக்கு இட்டுச் செல்கிற சாதனமாகி விடும். 'எதையும் வெளியிட்டுச் சொல்வதற்கில்லை' என்ற நிர்ப்பந்த நிலையை ஏற்படுத்திக் கொள்ளும் போது, சிறுகச் சிறுக எதையும் கிரகித்துக் கொள்வதிலும் ஆர்வம் குன்றத் தொடங்கும். மன அடக்கத்துக்கு இது வழி செய்யும். அப்போது 'நிர்ப்பந்தம்' என்கிற எண்ணமும் போய் மௌனமே சகஜ 'கக சுதந்திர நிலை என்ற உணர்வு பிறக்கும்.

இப்படித்தான் மௌனத்தால் சதாசிவரின் மனம் அடங்கத் தொடங்கியது. மனம் இருக்கும் வரையில் சலன உலகத்தின் ஓட்டங்கள் இருந்து கொண்டேதான் இருக்கும். வெள்ளித் திரையில் சலனப் படங்கள் ஓடிக் கொண்டேயிருக்கின்றன. அவை அந்தத் திரையையே நம் பார்வையிலிருந்து மறைத்து விடுகின்றன.

சலனப் படச்சுருள் முடிந்த வுடன் வெள்ளித் திரை மட்டும் நிற்கிறது ஒரே பிரகாசமாக. மனம் காட்டும் விசித்திர உலக நாடகத்தை மவுனம் முடித்து வைத்த பின், அந்த மனத் துக்கு ஆதாரமாக உள்ள ஆன்மா மட்டும் ஸ்வப்பிரகாச மாக நின்றது. அவர் நீண்ட காலமாக அவாவியபடியே அவ ரது வேகம் தணிந்தது. 'வேகம் கெடுத்தாண்ட வேந்தன் அடி வெல்க' என்று மணிவாசகர் பாடினார். பரம பாக்கியசாலி யான சதாசிவரின் வேகத்தை குருவாக வந்து அடக்கி ஆண் டான் ஈசன்.

பரம ஞான நிலைக்கு முன்பு மௌனமா யிருந்த சதாசிவர் இப்போது பேசலானார், பாட லானார், ஆடலானார். ஆனால் இது ஒரு தனி வியக்தியின் பேச்சும் பாட்டும் அல்ல. தனி மனித மனம் ஒய்ந்த பிற்பாடு பராசக்தியே அங்கு குரலெடுத் துப் பேசினாள், பாடினாள், ஆடினாள்.

சதாசிவ பிரம்மம் அருளியுள்ள வேதாந்த நூல்களும், துதிகளும், கீதங்களும் பல. தனி மனம் அடங்கியபின் எந்தப் பராசக்தி பேசுகிறாளோ அவளேதான் பேச்சற்ற தக்ஷிணா மூர்த்தி என்று உணர்த்துவதேபோல், லலிதா சகஸ்ரநாமங்களின் அடிப்படையிலேயே தக்ஷிணாமூர்த்தியைத் துதித்து 'தக்ஷிணாமூர்த்தி தியானம்' என்ற தோத்திரத்தை அளித்தார். பிரம்ம சூத்திரம், யோக சூத்திரம் ஆகியவற் றுக்கு விருத்தியுரை எழுதினார். 'ஆத்ம வித்யா விலாசம்' என்ற கிரந்தத்தில் ஆன்ம ஞானி யின் இயல்புகளை இதயபூர்வமாகப் பாடினார். 'துறவி மக்களின் பலதரப்பட்ட போக்குகளை யும் பார்த்துச் சிரித்துக் கொண்டு குழந்தை போல் வாழ்கிறான். எதுவும் தெரியாத ஜடம் போல், எதையும் பார்க்காத குருடனாக, எதை யும் கேளாத செவிடனாகவும் ஒரு சமயத்தில் இருக்கிறான். ஆத்மலோகத்தில் நிலைத்துவிட்ட இவன் உடலால் எங்கு வேண்டுமானாலும் சுற்றுகிறான், பாட்டுப் பாடுகிறான், நாட்டி யம் ஆடுகிறான். சூரியன் திடுமென சீதள கிரணங்களைப் பொழிந்தாலும் இவனுக்கு அதில் வியப்பில்லை. சந்திரன் வெப்பத்தைக் கொட்டினாலும் இவனுக்கு ஆச்சரியமில்லை. இந்த மாயாலோகத்தில் எதுவுமே இவனுக்கு விந்தையில்லை. சாரமற்ற உலகியல் என்ற பாலைவனத்தை விட்டு, ஆனந்தக் கனவை பொருந்திய ஞானத்தடாகத்தில் பரம ஹம்ஸ மாக நீந்துகிறான். பேத உணர்ச்சி போனபின் இவனுக்கு ஆடை எதற்கு? திகம்பரனாக, கிடைத்த இடத்தில் கையில் பிட்சை ஏந்திப் புசித்து, கிடைக்காவிட்டாலும் அதைப் பற்றி எண்ணமேயின்றி, ஏதோ ஒரு மரத்தடியில் படுக்கிறான். தன் தோளே இவனுக்குத் தலை யணை, பரந்த பூமி படுக்கை, தானே வீசும் காற்று இவனுக்குச் சாமரம். இவனுக்காகவே சந்திரன் என்கிற தீபத்தை இவனது கூரை யான வானத்தில் ஏற்றி வைத்திருக்கிறது. சாஸ்திரக் குவியல் என்ற பெரிய வலையிலிருந்து தப்பி நிச்சிந்தையாக, நிச்சலன நந்தா விளக் காக விளங்குகிறான்.' இப்படியெல்லாம் ஹிமாசல சிகரங்களைப் போன்ற உன்னத வாக்கியங்களை 'ஆத்ம வித்யாவிலாச'த்தில் பொழிந்தார் சதாசிவர்.

பரம சிவேந்திரருக்குப் பரம சந்தோஷம் உண்டாயிற்று.

"சதாசிவா, எனக்குப் பிறகு உனக்குத் தான் பட்டம்" என்றார்.

"அப்படியென்றால்?" என்று மலங்க மலங்கக் கேட்டார் சதாசிவர். அன்று அன்னை தனது பாரியாள் பெரியவளான தாகச் சொன்ன போது ஏற்பட்ட கலக்கத் தின் ஒரு சாயல் இன்று ஞானி சதாசிவருக்கும் ஏற்பட்டது. 'தனக்கா, காமகோடி பீடாதி பத்தியமா? ஊஹூம்' என்று தலையை ஆட் டிக் கொண்டார்.

"பட்டமா, அப்படி யென்றால்?"

"அப்படியென்றால்? சந்திர மௌளீச்வர ருக்குத் திரிகாலமும் பூஜை செய்ய வேண்டும் என அர்த்தம்...." என்பதாகப் பீடாதிபதி களின் கடமைகளைக் கூறத் தொடங்கினார் பரமசிவேந்திரர்.

கலங்கியிருந்த சதாசிவர் கல கலவென நகைத்தார். சிரிப்பை அவரால் கட்டுப் படுத்தவே முடியவில்லை. ஏதோ, பெரிய விசித்திரத்தைக் கண்டு விட்டது போல விழுந்து விழுந்து சிரித்தார் -- சூரியன் குளிர்ந் தாலும், சந்திரன் உஷ்ணமானாலும் அது கூட ஞானிக்கு விசித்திரமல்ல என்று பாடிய சதாசிவர் இப்பொழுது எந்த விசித்திரத்தைக் கண்டு சிரித்தார்? (அடுத்த இதழில் முடியும்)



## ஒரு புத்தகத்துக்கு ஐந்து லக்ஷம் டாலர்!

இவ்வாண்டு நோபல் பரிசு பெற்ற ருஷ்ய இலக்கிய மேதை அலெக்சாண்டர் சோல்ஷெனிட்சின் எழுதிய நூல்களை இரகசிய மாகக் கடத்தி வந்து மேலை நாடுகளில் வெளியிடும் ஆர்வம் எல்லை கடந்துவிட்டது. 'கான்சர் வார்டு', 'இவான் டெனிசோ விச்சின் வாழ்வில் ஒரு நாள்' முதலிய புகழ்பெற்ற நூல் களைக் கடத்தி வந்து பிரசுரித்தது போல், 'ஆகஸ்ட் - 1914' என்னும் அவருடைய நூலையும் இப்போது கடத்தி வந்து விட்டார்கள். முதல் உலகப் பெரும் போரையும் ருஷ்யப் புரட்சி காலக் கொடுமையையும் பின்னணியாகக் கொண்ட இந்த நூலை, "தம் வாழ்நாளிலேயே மிக முக்கியமான படைப்பு" என்கிறார் சோல்ஷெனிட்சின்.

'ஆகஸ்ட் - 1914'ஐ வெளியிடும் முழு உரிமையையும் பெறு வதற்காக ஸ்ட்ராஸ் வெளியீட்டகத் தலைவர் விமானத்தில் ஜெர்மனிக்குப் பறந்து சென்றார். பதிப்பகத்தின் சார்பாக, எழுத்தாளருக்கு 5 லட்சம் டாலர் சன்மானம் தரச் சம்மதித்து உலக உரிமையைப் பெற்றுத் திரும்பினார். "இம்மாத நூல்" என மாதந்தோறும் மலிவு விலையில் நூலைப் பிரசுரிக்கும் கிளப் மூலமாக இதில் பாதித் தொகையை ஒரே நாளில் சம்பாதித்து விட்டது ஸ்ட்ராஸ் வெளியீட்டகம்.

ஆனால் ஓர் இடைஞ்சல். ருஷ்ய அதிகார வர்க்கத்தின் அனுமதியின்றி இந்த இலக்கியப் படைப்பு ரகசியமாகப் பெற்று வரப்பட்டதால் சன்மானத் தொகை, சோல்ஷெனிட் சினுக்கு நேரடியாகப் போய்ச் சேரமுடியாது. ஆகவே, அவர் பேரில் மேற்கு ஜெர்மன் பாங்கில் இத்தொகை டெபாசிட்டாகப் போடப் பெறும்! - க. குழந்தைநாதன் - 'நியூஸ்வீக்'

# ரயிலே! ரயிலே! ஜோக் போடு!

சமீபத்தில் சென்ட்ரல் ஸ்டேஷனில் 'டென்ஷனி' கையே தோல்வியடையச் செய்யும் நிகழ்ச்சியொன்று நடைபெற்றது. பிளாட்பாரத்தின் மேலேயே ஏறிவிட்டது ரயில் வண்டி! அந்த ரயில் போட்ட ஜோக்குகள் இவை!



"இது எந்த வண்டி சார்?"
"நீலகிரி எக்ஸ்பிரஸ்."
"எந்த வழியாகப் போகிறது?"
"மயிலாப்பூர் வழியாக!"



"இந்தாப்பா எஞ்சின் டிரைவர், கூட ஐந்து ரூபாய் கொடுத்துவிடுகிறேன்; கூடுவாஞ்சேரியில் உள்ள என் வீடுவரை விட முடியுமா?"



போர்ட்டர்கள்: என்னய்யா இது அக்கிரமமா இருக்கு? நீயே "டாக்ஸி ஸ்டாண்ட்" வரைக்கும் வந்துட்டா எங்க பிழைப்பு என்ன ஆகிறது?



"புதிய 'டைம்டேபிள்'படி வண்டி எங்கெங்கே சார் போகிறது?"

"ஆறு மணிக்கு சென்ட்ரல், 6-05க்கு பேப்பர் ஸ்டால், 6-10க்கு வெஜிடேரியன் உணவு ஸ்டால், 6-15க்கு ஸ்டேஷன் மாஸ்டர் ரூம், 7 மணிக்குக் கடைசியாக ஜெனரல் ஆஸ்பத்திரி!"

கே. வி. முரளி



"இந்தாப்பா கார்ட்! வண்டி 'பிளாட்பார'த்தின் மேலே ஏற மாட்டேனென்கிறது. எல்லாரையும் கீழே இறங்கித் தள்ளச் சொல்லுப்பா!"



அறிவிப்பாளர்: யுவர் அட்டென்ஷன் ப்ளீஸ்! பிருந்தாவனம் எக்ஸ்பிரஸ் இன்னும் சில நிமிடங்களில் எட்டாவது பிளாட்பாரத்தின் மேல் ஏறும்!

# அவனுடைய தாயும் அவனுடைய மகனும்

**அய்க்கண்**

கார்ஸிகா தீவில் ஆயாட்ஸோ கிராமம், அன்று விழாக் கோலம் பூண்டிருந்தது.

அந்தக் கிராமத்தில் பிறந்த நெப்போலியன் எத்தனையோ ஆண்டுகளுக்குப் பிறகு மறுபடியும் அங்கே வருகிறான். எப்படி வருகிறான்? சாதாரண வழக்கறிஞர் சார்லஸ் போனபார்ட்டின் மகனாகவா? — பிரான்ஸ் நாட்டின் முடிசூடிய மன்னனாக வல்லவா விஜயம் செய்கிறான்?

வீதியெங்கும் வரவேற்பு அலங்கார வளைவுகள்; வண்ணப் பூச்சரங்கள்; அழகிய தோரணங்கள்; வீடெல்லாம் கண் கவரும் அலங்காரங்கள். மக்கள் புத்தாடைகளும் அணிமணிகளும் விளங்க, மாமன்னர் வருகையை எதிர்நோக்கி, மகிழ்ச்சி பொங்கக் காத்துக் கொண்டிருந்தார்கள்.

பாரிஸில் உயர் பதவிகள் அடைந்ததும், நெப்போலியன் தன்னிடம் வந்திருக்கும்படி தாயை எத்தனையோ முறை வருந்தி அழைத்தும், அவள் போகாமல் பழைய வீட்டிலேயே இருந்தது எவ்வளவு நல்லதாய்ப் போயிற்று! அந்தத் தாயைப் பார்ப்பதற்காகத்தானே மன்னன் நெப்போலியன் ஆயாட்ஸோவுக்கு வருகிறான்? இல்லா விட்டால் அந்தக் கிராமத்துக்கு மாமன்னரின் பாததூளி படும் பாக்கியம் கிடைத்திருக்குமா?

ஊரெல்லாம் விழாக் கோலம். வீடெல்லாம் மணக் கோலம்; ஆனால் நெப்போலியன் எந்த வீட்டுக்கு விஜயம் செய்கிறானோ, அந்த வீடு — அவன் பிறந்த வீடு — எப்படி இருந்தது?

போனபார்ட் குடும்பம் பெரியது; நெப்போலியனோடு கூடப்பிறந்த சகோதரர்கள் நான்கு பேர்; சகோதரிகள் மூன்று பேர். தந்தையை இழந்த குழந்தைகளைத் தாயார் லெட்டீஸியா ரமோலினோ, தாயும் தந்தையுமாக இருந்து வளர்த்தாள். குடும்பத்தின் வருமானங்களைத் திறமையாக நிர்வகித்து, செலவுகளைச் சிக்கனமாகச் செய்வதில் கெட்டிக்காரி அவள். குழந்தைகளைக் கண்டிப்பும் ஒழுக்கமுமாக வளர்த்தாள். தவறு செய்யும் பிள்ளைகளுக்குக் கடுமையான தண்டனை அளிப்பாள். நெப்போலியன் பதினாறு வயது இளைஞனாக இருக்கும்போதுகூட, அவனுடைய பாட்டியைப் பார்த்துக் கேலி செய்ததற்காக அவனைப் பிரம்பால் அடித்துத் திருத்தினாள்.

சிறு வயதிலிருந்தே நெப்போலியன் மேல் லெட்டீஸியாவுக்குத் தனிப் பிரியம். ஒலிம்பியாஸ், அலெக்ஸாண்டரை உருவாக்கியது போல், ஜீஜாபாய் சிவாஜியை வளர்த்தது போல், லெட்டீஸியாவும் நெப்போலியனைக் கட்டுப்பாடும் திறமையும் உடைய ஒரு போர் வீரனாக வளர்த்தாள்.

பத்து வயதிலேயே ராணுவப் பள்ளியில் சேர்ந்து, படிப்படியாக முன்னேறி, டுலானில் பிரிட்டிஷ் — ஸ்பானியக் கூட்டுப் படையை வென்ற தளபதியானான் நெப்போலியன். பிரிகேடியர்—ஜெனரலாக உயர்வு பெற்றான். அரசாங்கத் தலைவர்களிடையே செல்வாக்குப் பெற்ற அழகிய இளம் விதவை ஜோஸபீனைத் திருமணம் செய்து கொண்டதும் 'டைரக்டர்' கார்னட்டின் ஆதரவு கிடைத்ததும், நெப்போலியனுடைய வளர்ச்சிக்குத் தூண்டுகோலாய் அமைந்தன.

ஆஸ்திரியாவை வென்று, பிறகு எகிப்துக்கும் சென்று, வெற்றிவீரனாகத் திரும்பி வந்து, 'டைரக்டர்' ஆட்சியைக் கவிழ்த்து 'கான்ஸலேட்'டின் முதல் உறுப்பினராகி, பிரான்ஸின் சர்வாதிகாரியானான். திறமையற்றவர்களின் ஆட்சியால் வளமும் அமைதியும் குன்றி, ஏழைமையும் துன்பமும் நிறைந்து விட்ட பிரான்ஸ், தன்னை நெப்போலியனிடம் ஒப்படைத்துக் கொண்டு நிம்மதியாகப் பெருமூச்சு விட்டது. 1804, டிசம்பர் 2-ல் நெப்போலியன், பிரான்ஸின் மன்னனாக முடி சூட்டப்பட்டான்.

ஓர் ஏழைக் குடும்பத்தில் பிறந்து, மன்னராக உயர்ந்து, ஐரோப்பாவையே ஆட்டிப் படைக்கும் மாபெரும் வீரனாகத் திகழும் நெப்போலியனைப் பார்த்து, ஆயாட்ஸோ பெருமையால் பூரித்தது. தன் இடத்



தில் பிறந்து வளர்ந்த, தன் தெருத் தூசியிலே ஓடி விளையாடிய சிறுவனை, ஒரு மன்னனாக வரவேற்பதில் ஆயாட்ஸோ பெருமிதத்தோடு குதூகலித்துக் கொண்டிருந்தது. ஆனால் அவனுடைய தாயார் லெடிஸியா—?

தான் அதிகாரத்துக்கு வந்ததுமே, தன் சகோதரர்களுக்குத் தகுதிக்கு மீறிய பதவிகளை அளித்தான் நெப்போலியன். அண்ணன் ஜோஸெப், நேப்பிள்ஸுக்கும் ஸ்பெயினுக்கும் அரசனாக்கப்பட்டான். தம்பி லூஸியனைத் தன் அமைச்சர்களில் ஒருவனாகவும், கானினோவின் இளவரசனாகவும் நியமித்தான். லூயி, ஹாலந்து மன்னன்; கடைசித் தம்பி ஜெரோமுக்கு பிரான்ஸின் இளவரசர் பட்டமும், மேற்கு பாலியாவின் அரசப் பட்டமும் கிடைத்தன. மேரி பாலின் என்ற அன்புச் சகோதரிக்கு 'டச்சஸ்' பட்டம் அளித்தான். மேரியன் எலிஸ், கரோலின் மேரி ஆகிய தங்கைகளுக்கு ஏராளமான செல்வங்களை வாரி வாரிக் கொடுத்தான். தாய்க்கு அளவற்ற பணத்தையும், விலைமதிப்பற்ற செல்வப் பொருள்களையும் அனுப்பிக் கொண்டே யிருந்தான். போனபார்ட் குடும்பம், பிரான்ஸிலேயே தலைசிறந்த — ஈடிணையில்லாத— செல்வம் கொழிக்கும் குடும்பமாக ஆடம்பரமாக விளங்க வேண்டும் என்று எண்ணினான். நெப்போலியன்.



அவனும் அவனுடைய சகோதர சகோதரிகளும் பாரிஸில் அரண்மனை வாழ்வையும், அரச போகங்களையும் அனுபவித்துக் கொண்டிருக்கும்போது, தாய் லெடிஸியா மட்டும் ஆயாட்ஸோவில் பழைய வீட்டிலேயே எளிய வாழ்க்கை வாழ்ந்து கொண்டிருந்தாள். அவளைத் தன்னுடன் வந்து அரண்மனையில் சுகபோகங்களோடு வாழும்படி எத்தனையோ முறை அதிகாரிகளையும், சகோதரர்களையும் அனுப்பி அழைத்து வரச் சொன்னான். ஆனால் அவளோ, கண்டிப்பாக மறுத்து விட்டாள்.

பெரிய குடும்பத்தை ஆளாகவும், பெண்ணாகவும் நிர்வகித்து, நிலைநிறுத்தி, தன்னையும் ஒரு வீரனாக உருவாக்கிப் புகழ்பெறச் செய்த தாய் பழைய நிலையிலேயே வாழ, தான் மட்டும் மன்னனாக ஆடம்பர வாழ்வு நடத்துவது நெப்போலியன் மனத்தை வாளாக அறுத்தது. கடைசி முயற்சியாக, தாயைத் தன்னுடன் அழைத்துச் செல்லும் நோக்கத்துடன்தான் நெப்போலியன் அன்று ஆயாட்ஸோவுக்கு வந்தான்.

மன்னனுக்குரிய ஆடம்பரம், பரிவாரம் புடைசூழ நெப்போலியன் கிராமத்துக்குள் நுழைந்ததும் மக்கள் அனைவரும் கூடி நின்று அவனை வரவேற்றார்கள். அந்தக் கூட்டத்திடையே நெப்போலியனின் கூரிய கண்கள் வேகமாகச் சுழன்று மீண்டன. அவன் எதிர்பார்த்த ஏமாற்றம்தான்! அந்தக் கூட்டத்திலே அவனுடைய தாய் இல்லை.

வீட்டை நோக்கிச் சென்றான் நெப்போலியன். மக்களும் ஊர்வலமாக அவனைத் தொடர்ந்து, வாழ்த்தொலி முழக்கிக் கொண்டே நடந்தார்கள். தான் பிறந்த ஊரிலே மக்களெல்லாம் பாராட்டி வணங்கும் மன்னனாகப் பவனி வரும் நினைவிலே நெப்போலியனின் மனம் பூரித்தது.

வீடு வந்து விட்டது. வாயிலிலே, வயது முதிர்ந்து, கூன் விழுந்த தளர்ந்த உடலும்

ஒளி மங்கிய குழிக் கண்களுமாக நின்றாள் லெடிஸியா.

''அம்மா!'' என்று ஓடிச் சென்று அவளைக் கட்டிக் கொண்டான் மகன்.

''வா, மகனே! வா!...''

—தாயின் குரலிலே பெருமிதமும் பாசமும் பெருக்கெடுத்தன. தாயும் மகனும் வீட்டுக்குள் சென்றனர். படைவீரர்கள், வாசலிலே காவல் நின்று மக்களை அமைதியாக நிற்க வைத்துக் கொண்டிருந்தார்கள்.

தான் பிறந்து வளர்ந்த வீட்டைச் சுற்றி நெப்போலியனுடைய விழிகள் பதிந்து சுழன்றன. பழங் காலத்தைப் போலவே இப்போதும் அந்த வீடு எளிமையும் வறுமைக் கோலமுமாயிருந்தது. ஆடம்பரப் பொருள்களோ, பகட்டோ எதுவுமே இல்லாமல் களையின்றிக் காட்சியளித்தது.

லெடிஸியாவின் இடுங்கிய கண்களிலே, மன்னன் நெப்போலியனின் கம்பீரத் தோற்றம் நிறைந்து ஒளிர்ந்தது. பெற்ற மகன், நாட்டின் அரசனாக உயர்ந்திருக்கும் நிலைகண்டு தாயுள்ளம், 'பெற்ற போதிலும் பெரிது உவந்தது.'

''மகனே! உன்னைப் பற்றி எனக்கு ரொம்ப மகிழ்ச்சி!...நீ நீண்ட ஆயுளோடு வாழக் கடவுளைத் தினசரி பிரார்த்திக்கிறேன்...''

தாயின் காலடியில் உட்கார்ந்திருந்த மன்னனின் கண்கள் பனித்தன.

''அம்மா! நான் எத்தனை உயர்ந்து என்னம்மா? நீ என் அருகில் இருக்க மாட்டேன் என்கிறாயே?... போனபார்ட் குடும்பம் என்றால், பிரான்ஸ் மட்டுமல்ல; ஐரோப்பாவே மரியாதை செலுத்துகிறது. ஆனால் நீயோ, அந்தப் பெருமையிலும் செல்வத்திலும் பங்கெடுத்துக் கொள்ள மாட்டேன் என்கிறாயே? எத்தனையோ ஆண்டுகளாக எங்களுக்காக ஏழைமையும் சிக்கனமுமாக வாழ்ந்து, தேய்ந்துவிட்ட நீ, கடைசிக் காலத்திலாவது உன் மகனுடைய ராஜ போகங்களை அனுபவித்து ஆடம்பரமாக வாழக் கூடாதா?''

''மகனே! எனக்கு இந்த வாழ்க்கையே பழகிப் போய்விட்டது. நீ அரசனாக வாழ்வது கண்டு நான் அளவற்ற பெருமையடைகிறேன். உன்னைப் போல் உன் சகோதரர்களையும் செல்வ போகத்தில் வாழ வைத்திருப்பது கண்டு மகிழ்ச்சி; ஆனால்--''

'''ஆனால்' ஒன்றும் வேண்டாம், அம்மா! இந்தத் தடவை நீ என்னை ஏமாற்ற முடியாது. கண்டிப்பாய் நீ என்னுடன் பாரிஸுக்கு வரத்தான் வேண்டும் -- இது பிரான்ஸ் நாட்டு மன்னனின் கட்டளை'' என்று சற்றுக் கோபமாகவே சொன்னான் மகன்.

அவனுடைய தாயார் சிரித்தாள்.

''நெப்போலியன்! நீ பிரான்ஸ் நாட்டு மன்னன் என்பதற்காக உன்னை என் வீட்டுக்குள்ளே வரவேற்கவில்லை — என் மகன் என்பதற்காகத்தான்.''

அவள் குரலில் தொனித்த உறுதியும் கனமும் நெப்போலியனைக் கலக்கிவிட்டன.

''அம்மா! என்னை மன்னித்துக்கொள்... இந்த நாட்டு மன்னனாக நான் ஆணையிடவில்லை. உன் கையிலே பிரம்படி வாங்கிய மகனாகக் கேட்டுக் கொள்கிறேன் — நீ என்னுடன் பாரிஸுக்கு வா... என்னுடைய கைகளால் உருவாக்கப்பட்ட என்னுடைய உயர்ந்த வாழ்விலே நீயும் வந்து பங்கு பெற வேண்டும், அம்மா! நேப்பிள்ஸ் மன்னனும், ஸ்பெயின் அரசனும், காஸினோவின் இளவரசனும், ஹாலந்து மன்னனும், பிரான்ஸின் இளவரசனும், மேற்கு பாலியாவின் அரசனும் 'டச்சஸ்' மேரி பாலினும், சீமாட்டிகள் எலிஸாவும், கரோலினும், நெப்போலியனின் உடன் பிறந்தவர்கள் என்று சொல்லும்போது எனக்கு எவ்வளவு பெருமையாக இருக்கிறது? அதேபோல் உன்னையும் பாரிஸில் ஒப்பற்ற மாளிகையில் செல்வச் சீமாட்டியாக இருக்க வைத்து, 'இவர்தான் நெப்போலியனின் தாய்' என்று சொல்லும்போது என் உள்ளம் எத்தனை மகிழ்ச்சி யடையும் அம்மா?''

லெடிஸியா புன்முறுவலோடு, தன் மகனின் தலையைக் கோதி நெற்றியை வருடிக் கொண்டிருந்தாள்: ''மகனே! உன் சகோதரர்களுக்கு 'மன்னர் நெப்போலியனின் சகோதரர்கள்' என்ற பெருமை தேவையா யிருக்கலாம். ஆனால் எனக்கு அந்தக் கௌரவம் வேண்டாம். உலகம் என்னைப் பார்த்து, 'இவள் நெப்போலியனின் தாய்' என்று சொல்ல வேண்டாம்; உன்னைப் பார்த்து 'இவன் லெடிஸியாவின் மகன்' என்று சொல்லட்டும், அதுதான் எனக்குப் பெருமை.''

நெப்போலியன் திடுக்கிட்டான். தாயின் ஒவ்வொரு சொல்லும் அவன் உள்ளத்தில் சாட்டையடியாக விழுந்து பதிந்தது. திகைத்து நின்றான் பிரான்ஸ் மன்னன்.

''மகனே! இன்று உலகமே உன்னை வியந்து பாராட்டிப் புகழலாம்; ஆனாலும் நீ என் மகன்; நான் உன் தாய்... பயிரை வளர்த்து உண்டாக்குகிற வயல், பயிரிடமிருந்து ஏதையும் பெற்றுக் கொள்வதில்லை, மகனே! உன்னைப் பற்றி, உன் திறமையைப் பற்றி, உன் திறமையின் அளவு பற்றி எனக்குத் தெரியும். நீ எனக்காகக் கொடுத்தனுப்புகின்ற பணத்தையும் பொருள்களையும் அப்படியே சேமித்து வைத்திருக்கிறேன். அவை உனக்கு ஒரு காலத்தில் பயன்படலாம்...''

தாயின் பேச்சைக் கேட்டுக் கண் கலங்கி, ''இந்தப் பணமும் பொருள்களும் எனக்கு, எதற்கம்மா பயன்படப் போகின்றன?'' என்று கேட்டான் நெப்போலியன்.

''அப்படி நினைக்காதே!... காலம் என்பது இறந்த காலமும் நிகழ்காலமும் மட்டுமல்ல— எதிர்காலம் என்றும் ஒன்று உண்டு.''

''அம்மா! கடைசியாக என்ன சொல்கிறாய்? என் பேச்சைக் கேட்க மாட்டாயா?'' என்று கெஞ்சினான் நெப்போலியன்.

''மகனே! என் பேச்சை யெல்லாம் கேட்ட சிறு பிராயத்திலிருந்து இப்போது நீ பெரியவனாகிவிட்டாய் என்பது உண்மைதான். ஆனால் அதே சமயத்தில் நான் வயதிலும் அனுபவத்திலும் முதிர்ந்த கிழவியாகி யிருக்கிறேன் என்பதை மறந்தாயா?'' என்றாள் தாய்.

சென்ற இடமெல்லாம் வெற்றி மாலை சூடுகின்ற மாவீரன், தாயிடம் தோல்வி யடைந்து பாரிஸ் திரும்பினான்!

பத்து ஆண்டுகளுக்குப் பிறகு...

எல்பா தீவிலே அரச கைதியாக இருக்கிறான் நெப்போலியன். 1812ல் மாஸ்கோவரை சென்று, ருஷ்யின் கொடுமையால் பல

# ரேடியோவின் சிறந்த கட்டங்களுக்கு

# எஸ்ட்ரெலாவின் சிறந்த ரேடியோ பேட்டரிகள்

காகித, பிளாஸ்டிக், உலோகக் கவச உறைகளிட்ட பேட்டரி வகைகள் உள்ளன, நீங்கள் தேர்ந்தெடுக்க. கசியாத் தன்மை உடையவை அவை. நெடுங்கால உழைப்பிலும் இடையறாத சக்தியை வழங்குபவை. உங்கள் டிரான்ஸிஸ்டர் ரேடியோவின் மூலம் உங்கள் செவியின்பத்தைப் பெருக்கத் தலைசிறந்த பேட்டரிகள் — எஸ்ட்ரெலா.



**இலவசம்!**

திரைப்படங்கள், இசை,
விளையாட்டு, பொழுதுபோக்கு



**எஸ்ட்ரெலா**
பேட்டரிகள்

**அதிக சக்தி**
**அதிக உபயோகம்**

எஸ்ட்ரெலா பேட்டரீஸ்
லிமிடெட்.
பம்பாய்-19.

ஆயிரம் போர்வீரர்களை இழந்து பின்வாங்கி, பிரஷ்யா, ஸ்வீடன், ஸ்பெயின், பிரிட்டன் ஆகிய நாடுகளின் கூட்டுப் படையால் லீப்ஸிக்கில் படுதோல்வியடைந்து, 1814ல் பதவியைத் துறந்து எல்பாவுக்குக் கைதியாக அனுப்பப் பட்டிருக்கிறான் நெப்போலியன்...

ஒரு நாள்... கார்ஸிகா தீவிலிருந்து ஓர் ஆள், எல்பாவுக்கு ரகசியமாக வந்து நெப்போலியனைச் சந்திக்கிறான். அந்த ஆள் ஒரு கடிதமும் பண முடிப்பும் அவனிடம் கொடுக்கிறான். அவற்றைக் கொடுத்து அனுப்பியவள், அவனுடைய தாய் லெடிஸியா.

அன்புள்ள மகனே,

நம்பிக்கையான இந்த ஆளிடம் நான் கொடுத்தனுப்பியுள்ள பணம், முன்பு நீ எனக்கு அனுப்பியதுதான். முன்பு ஒரு முறை உன்னிடம் சொன்னேனே, 'நீ கொடுத்த பணமெல்லாம் ஒரு காலத்தில் உனக்கே பயன்படலாம்' என்றேனே, நினைவிருக்கிறதா?... இந்தப் பணத்தைப் பயன்படுத்திக் கொண்டு, மீண்டும் நீ பாரிஸுக்குப் போ. எல்பா சிறையிலிருந்து தப்புவதற்கும், வழிச் செலவுக்கும் படை திரட்டவும் இந்தப் பணம் உதவும்.

**தோல்வியைக் கண்டு தளர்ந்துவிடாதே:** முயற்சி செய் — வெற்றி நிச்சயம்! 'முடியாதது' என்ற வார்த்தையையே நான் உனக்குச் சொல்லிக் கொடுத்ததில்லை. உடனே பாரிஸுக்குப் புறப்படு. அங்கே ஆட்சிக் குழப்பம் நிறைந்திருக்கிறது. உனக்குச் சாதகமான நிலைமை உருவாகியிருக்கிறது. மக்கள் உன்னை வரவேற்பார்கள்.

வெற்றிக்கு என் வாழ்த்துக்கள்.

அன்புள்ள, லெடிஸியா'

நெப்போலியன், தாயின் அன்பையும் அறிவையும் கண்டு கண்ணீர் மல்க உருகுகிறான்.

இதோ, தாயின் கட்டளையை ஏற்று நெப்போலியன் பாரிஸுக்குப் புறப்படுகிறான்...

எல்பாவிலிருந்து தப்பிச் சென்று, கார்னெஸ் என்னும் ஊரில் வெளிப்பட்டு, சிறு படை ஒன்றைத் திரட்டிக்கொண்டு பாரிஸை நோக்கி முன்னேறுகிறான் நெப்போலியன்...

பாரிஸ் மீண்டும் லெடிஸியாவின் மகன் காலடியில் வீழ்ந்து வணங்குகிறது! *

* இரண்டாவது தடவையாக பிரான்ஸ் மன்னனாகிய நெப்போலியன் நூறு நாட்களே ஆட்சி புரிந்தான். பின்னர் வாட்டர்லூ போரில் முறியடிக்கப்பட்டு, ஸெயின்ட் ஹெலினா தீவில் சிறை வைக்கப்பட்டான்.

# படித்துப் பாருங்கள்

## P. S. SIVASWAMI AIYER

**(Builders of Modern India)**

கல்லூரி மாணவர்கள் ரொம்ப சந்தோஷப்படக் கூடிய ஒரு சம்பவம் ஸ்ரீ பி. எஸ். சிவஸ்வாமி அய்யர் வாழ்க்கையில் நடந்திருக்கிறது. இவர் சட்டக் கல்லூரி மாணவராய் இருந்தபோது அட்டெண்டன்ஸ் ரிஜிஸ்தரில் கையெழுத்துப் போட்டுவிட்டு வெளியே நழுவி விடுவார் விளையாட! காரணம், லெக்சர் போரடிக்கும்!

இதைவிட அதிகமாய் இன்னொரு விஷயத்துக்கு இன்று மாணவர்கள் மகிழலாம். சிவஸ்வாமி அய்யர் பின்னால் கல்லூரி விரிவுரையாளராக வந்தபோது தமக்கு மாணவப் பருவத்தில் ஏற்பட்ட அனுபவத்தை மறக்காதவராக மிகவும் சிரமப்பட்டுப் பாடங்களைத் தயாரித்துக் கொண்டு போனார்; தமது விரிவுரை ருசிகரமாக விளங்க வேண்டுமே என்ற கவலையில்!

சிவஸ்வாமி அய்யரின் நேர்மை, வள்ளல் தன்மை, அவரது அறிவாற்றல், தேசப் பணி, கல்வி ஆர்வம் என்று பலதரப்பட்ட குணநலன்களையும் பல சுவையான சம்பவங்கள் மூலம் நாம் உணர உதவுகிறார் திரு கே. சந்திரசேகரன் இந்த ஆங்கில நூலில். "நவீன இந்தியாவின் சிற்பிகள்" என்ற வரிசையில் வெளியிடப்படும் பல நூல்களுள் ஒன்றான இது, சென்ற தலைமுறையைச் சேர்ந்த அவரை இன்றைய இளைஞர்கள் நன்கு அறிந்துகொண்டு பின்பற்ற வசதி செய்து தருகிறது.

செல்வந்தரான சிவஸ்வாமி அய்யருக்குக் கருமி என்ற அவப்பெயர் அந்நாளில் உண்டு. இப்படி ஓர் அபத்தமான அபிப்பிராயம் பரவ அவருடைய சிறப்பியல்பே காரணமாயிருந்தது! பயனற்ற காரியம் என்று தோன்றினால் சல்லிக் காசு தரமாட்டார். நல்ல காரியங்களுக்கு அள்ளிக் கொடுக்கும்போதும் இடக்கை அறியாத விதமாகத்தான் வலக்கரத்தால் அளிப்பார். ஏன், தேசியப் பெண்கள் உயர்நிலைப் பள்ளி என்ற பெயரை லேடி சிவஸ்வாமி அய்யர் உயர்நிலைப் பள்ளி என்று மாற்றி அமைக்கத், தாம் ஜீவியவந்தராக இருந்தவரை அனுமதிக்கவே இல்லையே அவர்! இன்றைத் தலைவர்கள் இதைப் பற்றிச் சிந்தித்துப் பார்ப்பார்களா?

பேரறிஞரான சிவஸ்வாமி அய்யர் ஏராளமான புத்தகங்களை வாங்கிப் படித்துப் பயனுற்றது மட்டுமல்ல; புத்தகங்களிடம் அன்பு செலுத்தினார், ஏன், காதலித்தார் என்றுகூடச் சொல்லலாம்! யாராவது ஒரு புத்தகத்தின் பக்கத்தை அடையாளத்துக்காக மடித்துவிட்டால் தம் எதிரே சிசுஹத்தி நடப்பது போல் துடித்துப் போவார்!

மிதவாதக் கட்சியினரான அவர், அயல்நாட்டுப் பயணம் மேற்கொள்ளு முன்னர் சொன்னார்: "தேசத்துக்குப் பணியாற்ற ஒவ்வொருவரும் தத்தமக்கேற்ற வழியைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளுகிறார்கள். இப்போது நான் அமெரிக்காவுக்கும் ஐரோப்பாவுக்கும் எந்த ஒரு அரசியல் நோக்கத்தோடும் போகவில்லை. என்றாலும் என்னால் ஏதாவது எளிய சேவை செய்ய முடியுமானால் அதை என் கடமையாகக் கருதிச் செய்வேன்."

இவ்வாறு அடக்கமாகப் பேசியபோதிலும் இவர் சாதித்தது எவ்வளவு என்பதை அறிய இவர் அந்நாடுகளில் சந்தித்த பல்துறைத் தலைவர்களின் பெயர்களைப் பட்டியல் போட்டுப் பார்த்தாலே போதும்! இந்தியாவிடம் நல்லெண்ணம் பெருக எத்தனை பாடுபட்டிருக்கிறார் என்பது புரிந்து போகும்.

நடனம், நாடகம் என்றெல்லாம் மேனாடுகளில் பல நிகழ்ச்சிகளைப் பார்த்தார் சிவஸ்வாமி அய்யர். ஆயின் இந்தியக் கலாசாரத்தில் ஊறித் திளைத்திருந்த அவருக்கு மேனாட்டுப் பாணிகளில் பிடிப்பு ஏற்படவில்லை. ஆயினும் மேனாட்டு ஓவியங்களும் சிற்பங்களும் இவரை வெகுவாகக் கவர்ந்தன.

வழக்கறிஞர் என்ற முறையில் இவர் எதிராளியிடம்கூட ரொம்ப நேர்மையாக நடந்துகொண்டார். ஒரு சமயம் எதிர்த் தரப்பு வக்கீல் அறிந்திராத ஒரு 'பாயின்ட்'டை இவரே எடுத்துக் கொடுத்தார்!

மேற்சொன்ன பல்வேறு கோணங்களிலும் சிவஸ்வாமி அய்யரை திரு கே. சந்திரசேகரன் நமக்கு அறிமுகம் செய்து வைக்கும்போது ஓர் உயர்ந்த மனிதரிடம் நெருங்கிப் பழகிய திருப்தி நமக்கு ஏற்பட்டு விடுகிறது.

கிடைக்குமிடம்: Publications Division, Ministry of Information & Broadcasting, Government of India, New Delhi; Price Rs. 2-75.

# போர்ஹென்ஸ் பற்பசையால் தவறாது பிரஷ் கொண்டு பல் துலக்கினால் ஈறு உபாதைகளையும் பற்சிதைவையும் தடுக்கலாம்

சிறியோர், பெரியோர், யாவரிடமிருந்தும் தாமாகவே தேடிவந்த நற்சாட்சிக் கடிதங்கள், ஈறு உபாதைகளை நிறுத்தி, பற்சிதைவைத் தடுக்கும் போர்ஹென்ஸ் பற்பசையின் அற்புதமான விளைவுகளைப் பாராட்டுகின்றன. அந்தக் கடிதங்களை ஜெப்ரி மானேர்ஸ் & கோ. லிமிடெட்டின் எந்த அலுவலகத்திலும் காணலாம்.

''போர்ஹென்ஸ் பற்பசைக்கும், அதை நான் தவறாமல் உபயோகிக்கச் சொன்ன டாக்டருக்கும் நான் நன்றிக்கடன் பட்டிருக்கிறேன்...இதன் விளைவு, எனது 76வது வயதிலும், ஒரே மாதிரியாகப் படிந்துள்ள பளபளப்பான என் பற்கள் ஆரோக்கியமான ஈறுகளில் வலுவாக வேரூன்றியுள்ளன...''

—விபூதி பூஷன் போஸ், கல்கத்தா

''உலகப் புகழ் பெற்ற உங்கள் பற்பசையை என் சிறு பிராயம் முதல் தவறாது உபயோகித்து வருகிறேன். இன்று என்னுடைய ஒவ்வொரு பல்லும் வலுவாக இருக்கிறது ... நான் போர்ஹென்ஸை எல்லா வகையிலும் சிறந்த பற்பசையாகக் கருதுகிறேன். ஏனெனில் அது பல் வைத்தியர் ஒருவரால் உருவாக்கப்பட்ட பற்பசை. அது ஒன்றே போதுமே...!''

—எஸ்.எஸ்.சட்டர்ஜி, கோயம்புத்தூர்

பற்களைத் தக்க முறையில் பராமரிக்க, இரவிலும் காலையிலும் போர்ஹென்ஸ் பற்பசையையும், போர்ஹென்ஸ் டபிள்-ஆக்ஷன் டூத்ப்ரஷ்ஷையும் உபயோகியுங்கள் ... தவிர, உங்கள் பல் வைத்தியரையும் தவறாது பார்த்து வாருங்கள்!




இலவசம்! ''பற்களையும் ஈறுகளையும் பராமரிக்கும் முறை'' என்னும் விவரமான வண்ணப் புத்தகம்.

இந்தப் புத்தகத்தைப்பெற, (தபால் செலவுக்காக) 20 பைசா தபால் தலையை ''மானெர்ஸ் டென்டல் அட்வைசரி ப்யூரோ, தபால் பை 10031, பம்பாய் 1'', என்னும் முகவரிக்கு அனுப்புக. புத்தகம் 10 மொழிகளில்* கிடைக்கிறது.

K-6

பெயர் ________ வயது ________

முகவரி ________________

*எந்த மொழியில் புத்தகம் வேண்டுமோ, அதன் கீழ் தயவு செய்து கோடிடவும். ஆங்கிலம், இந்தி, மராட்டி, குஜராத்தி, உருது, வங்காளி, தமிழ், தெலுங்கு, மலையாளம், அல்லது கன்னடம்.

**போர்ஹென்ஸ்** பல் வைத்தியரொருவரால் உருவாக்கப்பட்ட பற்பசை

MF-180 TAM

# கலப்படம்..!

மாரி-அறவாழி



**புது** மணப் பெண்ணைப் போல் பளபளக்கும் புத்தம் புதிய 'அம்பாஸிடர்' ஒன்று தன் கடை முன்னால் வந்து நிற்பதைக் கண்டு, உள்ளே உட்கார்ந்து பழைய செருப்பு ஒன்றைக் கவனமாகத் தைத்துக் கொண்டிருந்த கூன் விழுந்த கிழவன் வியப்புடன் தலை நிமிர்ந்து பார்த்தான்.

''என்ன கறுப்பா! சுகம்தானே?....'' — என்று கனிவுடன் கேட்டுக் கொண்டே கீழே கால் வைத்தார் முதலாளி. அவரைப் பார்த்தவுடன் கிழவனுக்கு யாரென்று புரியவில்லை போலும்! சற்று நேரம் திகைத்து நின்றான். கண்களைக் கசக்கிக் கொண்டு உற்றுப் பார்த்தான்.

''என்ன கறுப்பா, அப்படிப் பார்க்கிறாய்? அதுக்குள்ளே மறந்து போய்விட்டாயா?.... அட நான்தான் அப்பா....''

கிழவனுக்குச் சட்டென்று புரிந்திருக்க வேண்டும்.

''ஐயோ, மொதலாளி, நீங்களா! என்னெ மன்னிச்சுடுங்க... மன்னிச்சுடுங்க... ரொம்ப நாள் பார்க்காததுனாலே சட்டுன்னு உங்களைப் புரிஞ்சுக்க முடியல்லே.....'' என்று பரபரப்புடன் கூச்சலிட்டுக் கொண்டே எழுந்தோடி வந்து அவரை எதிர்கொண்டான்.

கொஞ்சமும் கூச்சப்படாமல் அவன் குடிசைக் கடைக்குள் நுழைந்த முதலாளி அங்கிருந்த காலொடிந்த ஸ்டூலின் மேல் உரிமையோடு உட்கார்ந்து கொண்டார்.



''கடையெல்லாம் எப்படி நடக்குது கறுப்பா?''

''ஏதோ உங்க புண்ணியத்தாலே ஓடுதுங்க. கஞ்சிக்குக் கொறைச்சல் இல்லே....''

''உன் மகன் ஒருத்தன் இருந்தானே, பள்ளிக்கூடம் போய்க் கொண்டு. அவன் எந்த வகுப்புப் படிக்கிறான்?...''

''நிறுத்திட்டேனுங்க அவனெ....''

''அடடே!. ஏன் நிறுத்தி விட்டாய்?''

''படிச்சு என்னத்தைச் செய்யறதுங்க, மொதலாளி? அதோட எனக்கும் வயசாயிடுச்சுல்ல, கண் சரியாத் தெரியமாட்டேங்குது. உதவிக்கு ஆள் வேண்டியதாயிருக்கு. நிறுத்தி விட்டேன்.....''

(இதுவே தொடர்ந்தால்)

"மொதலாளி இத்தனை நாளும் எங்கிட்டுப் போயிருந்தீங்க...? கண்ணிலேயே படலியே?"

முதலாளி தொண்டையைக் கனைத்துக் கொண்டு சொன்னார்:

"பம்பாய்ப் பக்கம் போயிருந்தேன், கறுப்பா. அங்கே போய்த்தான் ஏதோ நாலு காசு சம்பாதிக்க முடிஞ்சுது.... இப்ப மெட்ராஸுக்கே வந்துட்டேன்....."

"ஆமாங்க, அதுதாங்க நல்லது. வெயாரம் பேரம்னு செய்யறதுக்கு நம்ம ஊர்ப் பக்கம்தானுங்க நல்லது...."

"இப்ப நான் வியாபாரம் எதுவும் செய்ய வில்லே கறுப்பா.... கட்டட 'காண்ட்ராக்ட்' எடுத்திருக்கிறேன். இன்னைக்குக்கூட ஒரு காண்ட்ராக்ட் — டெண்டர் சம்பந்தமாகத் தான் சேலத்துக்குப் போய்க்கிட்டிருக்கிறேன். வழியிலே இந்த ஊரிலே ஒரு நாள் தங்க வேண்டியிருந்தது.... உன் நினைவு வந்தது. பார்த்துப் போகலாம்னு வந்துட்டேன்....."

"ரொம்ப சந்தோசமுங்க மொதலாளி."

இதைக் கூறியபோது நன்றியுணர்வால் அந்தக் கிழவனின் கண்கள் கலங்கின. முதலாளி தொடர்ந்தார்.

"பேச்சு சுவாரஸ்யத்திலே உன்னிடம் வந்த காரியத்தை மறந்துவிட்டேன் பார்த்தாயா? கறுப்பா.... உன் கையாலே எனக்கொரு செருப்பு தைத்துக் கொடு. என் கால் இப்ப பெரிசாயிருக்கும். நன்றாக அளவெடுத்துக் கொள்......"

கிழவன் அளவெடுத்துக் கொண்டான். முதலாளி கேட்டார்.

"செருப்பு எப்போது கிடைக்கும்?"

"காலையிலே தரேனுங்க, மொதலாளி.... சரிதானே ?"

"சரிதான்: ஹோட்டல் முரளியிலே ஐந்தாம் நம்பர் அறையிலே தங்கியிருக்கிறேன். எட்டு மணிக்குள்ளே கொடுத்தனுப்பு..... நான் வரட்டுமா...?"

இரு கைகளையும் கூப்பி விடை கொடுத்தான் கிழவன்.

முதலாளி வந்து வண்டியில் ஏறிக் கொண்டவுடன் ஹோட்டலை நோக்கி மெதுவாகச் செலுத்தினேன். வழியெல்லாம் எனக்கு முதலாளியைப் பற்றியே நினைவு. அவரது செயல் புரிந்துகொள்ள முடியாத புதிராக இருந்தது எனக்கு.

நவநாகரிகமான செருப்புக் கடைகள் எத்தனையோ இருக்கும் போது அவற்றையெல்லாம் விட்டு விட்டுக் கேவலம் ஒரு மரத்தடிக் காரக் கிழவனிடம் அவர் செருப்பு வாங்க வேண்டிய அவசியம் என்ன? மெதுவாக முதலாளியிடம் கேட்டேன்.

"இந்தக் கிழவன் எனக்கு ரொம்ப நாள் பழக்கம். அந்தப் பழக்கத்துக்குக் காரணம் இவன் செய்யும் வேலையெல்லாம் ஒரிஜினல் என்பதோடு, இவனும் ஒரிஜினல் மனிதன் என்பதுதான்! இப்போது நான் காரிலே போகிறேன் என்பதற்காகப் பழையதையெல்லாம் மறந்துவிட முடியுமா? பத்து வருடங்களுக்கு முன்னாலே நான் ரொம்ப ஏழையாக இருந்தேன். கையிலே இருந்த பணத்தையெல்லாம் ஒரு வியாபாரத்திலே தொலைத்து விட்டுச் சொல்ல முடியாத வறுமையிலே நடைப்பிணமாகத் திரிந்துகொண்டிருந்தேன். அந்த நேரத்தில் எல்லாரும் என்னைக் கைவிட்டு விட்டார்கள். ஒரு சிங்கிள் டீக்குக்கூட லாட்டரி. அந்த நிலைமையிலேயெல்லாம் என்னிடம் மாறாத அன்பு வைத்திருந்தவன் இந்தக் கிழவன் ஒருவன்தான். இவனிடம் நான் வழக்கமாகச் செருப்பு வாங்கிக் கொண்டிருந்த வாடிக்கை ஒன்றுதான் எங்கள் இருவருக்குமிடையே இருந்த தொடர்பு. ஆனால், அதுதான் எவ்வளவு வேர் விட்டிருந்தது!.... அவமானத்தால் வீட்டை விட்டு வெளியே தலை காட்ட முடியாமல் குறுகிக் கிடந்த நேரத்திலெல்லாம், 'வா' என்று அன்போடு கூப்பிட ஒரு மனித ஜந்துகூட எனக்கு இந்த ஊரில் இல்லாது போய்விட்ட சந்தர்ப்பத்திலெல்லாம் இவன் ஒருவனே எனக்கு அடைக்கலம் கொடுத்தான். என்றும்போல் அன்போடு வரவேற்றான். கடையிலே உட்கார வைத்து டீ வாங்கிக் கொடுத்தான். ஆகா! கேவலம் பத்துப் பைசா டீதானே என்று இப்போது அலட்சியமாக இருக்கும். அந்த ஒரு மிடறு டீத் தண்ணீர்கூட அப்போது எப்படி அமிர்தமாக இருந்தது தெரியுமா!... அப்படிப்பட்டவனை என் உயிர் உள்ளளவும் மறக்க முடியுமா?...."

முதலாளியின் கண்களிலிருந்து நீர் முத்துக்கள் உருண்டன. நான் பார்த்துவிடக் கூடாதே என்பதற்காக அதை அவசர அவசரமாகத் துடைத்துக் கொண்டார். அவரது மன நிலையை உணர்ந்த நான் அதற்கு மேல் எதுவும் பேசவில்லை.

அடுத்த நாள் காலை எட்டு மணிக்குக் கறுப்பன் கடைக்குச் சென்றேன் நான். கடையில் கறுப்பன் இருக்கவில்லை. அவன் மகன்தான் இருந்தான். அவசரம் அவசரமாகச் செருப்பைத் தைத்துக் கொண்டிருந்தான். நான் அங்கேயே காத்திருந்து செருப்பைக் கையோடு முடித்து வாங்கிக் கொண்டு திரும்பினேன்.

ஒன்பது மணி சுமாருக்கெல்லாம் நாங்கள் ஹோட்டலைக் காலி செய்துவிட்டுக் கிளம்பினோம். ஹோட்டலிலிருந்து சென்ற பாதை மெயின் ரோட்டில் போய்ச் சங்கமமாகியது. காலை நேரம் என்பதால் ரோட்டில் ஒரே கூட்டம். வண்டியை மெதுவாக ஓட்டிக்கொண்டு போனேன்.

அப்போது சாலையின் மறுபுறத்திலிருந்து "முதலாளி, முதலாளி!" என்று யாரோ கூப்பிடும் குரல் வந்தது. அந்தக் குரல் கறுப்பனுடையது என்பதை உணர்ந்த நான் வண்டியை மெதுவாக ஒதுக்கி ஓர் ஓரத்தில் கொண்டு போய் நிறுத்தப் போனேன். கறுப்பன் அதற்குள் அவசரப்பட்டு விட்டான். குடுகுடுவென்று ரோட்டில் இறங்கி எங்கள் காரை நோக்கி வேகமாக ஓடி வந்தான். கண்ணை மூடிக் கொண்டு சைக்கிள் ஓட்டி வந்த மைனர் ஒருவன் கிழவன் மேல் சைக்கிளை மோதி இடித்துத் தள்ளிவிட்டு ஓடிவிட்டான்.

நடு ரோட்டில் மூர்ச்சையாகி விழுந்த கறுப்பனை நானும் முதலாளியும் பாய்ந்து சென்று தூக்கி வந்தோம். காரில் வைத்துக் கொண்டு அருகில் இருந்த மருத்துவ விடுதிக்குச் சென்றோம்.

ஊசி போட்டு அரை மணி நேரத்துக்குப் பின்புதான் கண் விழித்தான் கிழவன். முத

இன்றைய முன்னணி பிரபல

## பழனி டாக்டர் எஸ். காளிமுத்து

R. M. P. (Ind.) V. V. C., A. M. I. H.

**அவர்களின் விஜயம்**



சந்திக்கும் விலாசங்கள் :

**10-ந் தேதி திருப்பத்தூர் (N. A.) :** சங்கர் கபே பகல் 1 மணி முதல் 2-30 மணி வரை.

**10ந் தேதி ஆம்பூர் :** N. A. B. லாட்ஜ், மாலை 1-30 மணி முதல் 5 மணி வரை.

**11-ந்தேதி வேலூர் (N.A) :** அஜீஸ் மேன்ஷன்ஸ் காலை 8 மணி முதல் 11 மணி வரை.

**11ந் தேதி குடியாத்தம் :** அலங்கார் லாட்ஜ் பகல் 1 மணி முதல் 3 மணி வரை.

**12-ந் தேதி பெங்களூர் ஸிடி :** நியூ எவரெஸ்ட் ஹோட்டல், காலை 8 மணி முதல் மாலை .5 மணி வரை.

**13-ந் தேதி கிருஷ்ணகிரி :** ஸ்ரீ ராம் லாட்ஜ், காலை 8 மணி முதல் 10 மணி வரை.

**13-ந் தேதி தர்மபுரி :** சீனிவாசா லாட்ஜ் பகல் 11 மணி முதல் 12 மணி வரை.

**13-ந் தேதி சேலம் :** லக்ஷ்மி ராஜபவன் லாட்ஜிங், பகல் 2 முதல் 5 மணி வரை.

**15-ந் தேதி ஈரோடு :** நவபவனம் லாட்ஜ் காலை 8 மணி முதல் 12 மணி வரை.

**15-ந் தேதி திருப்பூர் :** ஸ்ரீ கிருஷ்ணா லாட்ஜிங் பகல் 2 மணி முதல் 4 மணி வரை.

**15-ந் தேதி பொள்ளாச்சி :** ஹோட்டல் கீதாஞ்சலி. மாலை 5-30 மணி முதல் 7-30 மணி வரை.

**16-ந் தேதி கோவை :** விஜயா லாட்ஜ். காலை 8 மணி முதல் மாலை 3 மணி வரை.

**21 & 22-ந் தேதி பம்பாய் :** சாரதா பவன் (மதுங்கா), காலை 8 மணி முதல் மாலை 4 மணி வரை.

**23-ந் தேதி ஹைதராபாத் :** தாஜ்மஹால் ஹோட்டல், பகல் 12 மணி முதல் மாலை 4 மணி வரை.

## பழனி சித்தர் வைத்தியசாலை

போன்: 316] பழனி [தந்தி: சித்தர்



பம்பாய் திரு டி. எஸ். ஜெயராம அய்யர் அவர்களின் குமாரி சௌ. **பத்மாவதி** B. A.க்கும், சென்னை திரு எம். சூரிய நாராயண அய்யர் அவர்களின் குமாரன் சிரஞ்சீவி **S. ராதாகிருஷ்ணன்** B. E. (Hons) M. S. (U. S. A.) க்கும் 10-6-1971 அன்று ''கௌதமா'' இல்லம் தஞ்சாவூரில் வெகு சிறப்பாகத் திருமணம் நடந்தேறியது. வாழ்க மணமக்கள்

# நிறைவான கருத்தடைச் சாதனத்தைத் தேடி அறவே இனி அலைய வேண்டியதில்லை.




கருத்தடை முறைகள் பல: விடாய் கணக்கு முறை, வெளி இழுப்பு, பாதுகாப்பு முறை, கழுவல் முதலியன. உங்களுக்கென்று நீங்கள் ஒன்றைத் தேர்ந்தெடுத்திருக்கக்கூடும். ஆனாலும், நீங்கள் இப்புதிய கருத்தடைச் சாதனத்தை உபயோகித்துப் பாருங்களேன். அதுதான் டெல்ஃபென்.

கருத்தடைச் சாதன வரலாறு காணாத வகையில் மிகச் சக்தி வாய்ந்த உயிரணுக்களைக் கொல்லும் மருந்துகளடங்கிய கருப்பை வழிக் க்ரீம் டெல்ஃபென். அது பாதுகாப்பானது. மென்மையானது. உலகெங்கிலுமுள்ள நாகரிக இல்லத்தரசிகள் டெல்ஃபென் உபயோகிக்கத் தொடங்கி வருகின்றனர். பயன்மிக்க, வசதியான இதை ஒரு முறை உபயோகித்துப் பார்த்தால், நீங்களும் கூட இதையே நாடுவீர்கள். அதற்கான காரணங்கள் இதோ:

- டெல்ஃபென் விரைவிலே உபயோகிக்க எளிதானது.
- உணர்ச்சிவேகத்துக்கு ஊறுசெய்யாது.
- பாதுகாப்பானது.
- மென்மையானது, எரிச்சல் தராது.
- சுத்தமானது, எண்ணெய்ப்பசையற்றது. கணவன்-மனைவி இருவருக்குமே இன்பமானது.
- தேவையானபோது மட்டுமே உபயோகிக்கப்படுவது.
- மிகவும் சிக்கனமானது. ஒருதடவை உபயோகிப்பதற்கான செலவு 15 காசு தான்.
- சுவடின்றி மறைந்து விடுகிறது.
- உலகெங்கும் டாக்டர்களால் சிபாரிசு செய்யப்படுகிறது.

நீங்களும் உங்கள் குடும்ப டாக்டரை விசாரிக்கலாம். இப்போது நீங்கள் உபயோகித்து வரும் கருத்தடைச் சாதனத்துடன் டெல்ஃபெனை ஒத்திட்டுப் பாருங்கள். டெல்ஃபென் அளிக்கும் நலன்கள் யாவையும் சிந்தித்துப் பாருங்கள்...

நிறைவான கருத்தடைச் சாதனத்தைத் தேடி அறவே இனி அலைய வேண்டியதில்லை என்று இப்போது ஒப்புக் கொள்கிறீர்களா?

50கி, 100கி, டியூபுகள் மற்றும் கையடக்கமான பிளாஸ்டிக் பைகளில் டெல்ஃபென் இப்போது கிடைக்கிறது. புதிய 2.5கி. அப்ளிகேடர் மூலம் டெல்ஃபெனை உபயோகித்து மேலும் சிக்கனம் செய்யுங்கள்.

விளக்கப்படங்களுடன் கூடிய இலவச கைப்புத்தகத்திற்கு எழுதுக:

டிபார்ட்மென்ட் எஸ், எத்னூர் லிட்., 30ஏ, ஃபோர்ஜெட் ஸ்ட்ரீட், பம்பாய்-26.

நம்பிக்கையின் மறு பெயர்

## டெல்ஃபென் க்ரீம்

பதிவு பெற்ற டிரேடு மார்க். JAISONS-184

லாளி சற்றுப் படபடப்புடனே அவனிடம் கேட்டார்.

"என்ன கறுப்பா... எதற்காக அப்படி ரோட்டில் இறங்கி ஓடிவந்தாய்? நாங்கள்தான் வண்டியை ஓரமாக நிறுத்தி யிருந்தோமே.... அதற்குள் என்ன அப்படித் தலை போகிற அவசரம் ?......."

கறுப்பன், வறண்டு போன தன் உதடுகளை நாவின் ஈரத்தால் நனைத்துக் கொண்டே வேதனையுடன் சொன்னான்.

"உங்களைப் பார்க்கத்தானுங்க முதலாளி அவசரம் அவசரமாக ஓடி வந்தேன். எங்கே நீங்கள் புறப்பட்டு விடுகிறீர்களோ என்ற பரபரப்பு......."

"அப்படியா? என்ன சங்கதி ?...."

"ஒரு பெரிய தப்பு நடந்து போச்சுங்க..."

"என்ன தப்பு ?"

"உங்களுக்குத் தைச்சுக் கொடுத்த செருப்பிலே என் மகன் கலப்படம் செய்துட்டானுங்க..... பாதி வேலை செய்துகிட்டிருக்கிற போதே எனக்கு உடம்பு சரியில்லாமல் போயிடுச்சுங்க..... அதனாலே மீதியைப் பையன்கிட்டே கொடுத்து முடிக்க வைக்கச் சொன்னேன். அந்த நேரத்திலே அவன் இப்படி செய்துட்டானுங்க முதலாளி..."

என்னவோ ஏதோ என்று பரபரப்புடன் கேட்டுக் கொண்டிருந்த முதலாளிக்குக் கறுப்பன் கூறியது கேட்டுச் சிரிப்பு வந்தது.

"ப்பூ ! இவ்வளவுதானா? செருப்புக்குள்ளே தோல் 'ஆஸ்' வைக்கிறதுக்குப் பதிலாக அட்டையை வைத்து விட்டான்..... அவ்வளவுதானே ?...."

நடுங்கும் குரலில் சொன்னான் கறுப்பன்:

"என்னங்க முதலாளி 'அவ்வளவு தானா'ன்னு சுலபமாச் சொல்லிட்டீங்க.... அது எவ்வளவு பெரிய குத்தம் தெரியுங்களா ! என் வேலை மேலேயும் என் மேலேயும் வைத்திருக்கிற நம்பிக்கையின் பேரிலேதானே, இந்த ஊரிலே இருக்கிற பெரிய பெரிய கடைகளையெல்லாம்கூட விட்டு விட்டு என்கிட்டே ஆர்டர் கொடுத்தீங்க. அப்படியிருக்கும்போது செருப்பிலே கலப்படம் செய்து, அந்த நம்பிக்கையைக் குலைக்கிறது பெரிய துரோகம் இல்லீங்களா ? அதனால் வர்ற வருமானம் நம்ம உடலிலே ஒட்டுங்களா ?...."

முதலாளியின் முகம் சட்டென்று மாறியது' அதற்கு மேல் அவனிடம் ஒன்றும் கேட்கவில்லை. அவர் சில விநாடிகள் என்னவோ யோசித்துக் கொண்டிருந்துவிட்டு, "இப்போது என்ன செய்ய வேண்டும் என்கிறாய் கறுப்பா ?....." என்றார்.

"செருப்பைக் கழற்றிக் கொடுங்க, முதலாளி. அந்த அட்டையை எடுத்துட்டு நல்ல அசல் "ஆஸ்" வச்சு ஒரு பத்து நிமிசத்திலே உங்களுக்குத் தைச்சுக் கொடுத்திடறேன். அப்பத்தான் எனக்கு நிம்மதி...."

"சரி. அப்படின்னு புறப்படு.... நானும் உன் கூடவே வர்றேன்......"

இவ்வாறு கூறிய முதலாளி கறுப்பனையும் வண்டியில் உட்காரச் செய்தார். கறுப்பன் கடையை நோக்கி வண்டி சென்றது.

அரைமணி நேரத்தில் செருப்பு சீர் செய்யப்பட்டது. அதை முதலாளியின் கால்களில் அழகாக மாட்டிவிட்ட போது அந்தக் கிழவன் முகத்தில் சுடர்விட்ட திருப்தி.....!

வண்டியில் ஏறி உட்கார்ந்த முதலாளி ஆழ்ந்த சிந்தனை வசப்பட்டு நெடுநேரம் அமைதியாகவே இருந்தார்.

கூட்டு ரோடு வந்தவுடன் சேலம் பாதையில் வண்டியைத் திருப்பினேன் நான்.

"முத்து!... வண்டியை மெட்ராஸுக்கே திருப்பு......" என்று திடீரென்று கூறினார் முதலாளி. திடுக்கிட்டேன் நான்.

"என்ன முதலாளி சொல்லறீங்க ?"

"சேலம் போக வேண்டியதில்லை நாம்."

"ஏனுங்க? பன்னிரண்டு மணிக்குள்ளே நாம் சேலம் போய்ச் சேர்ந்தால்தானே டெண்டர் உடைக்கிற போது அங்கே இருக்க முடியும்....."

"இனி அந்த டெண்டரும் வேண்டாம், காண்ட்ராக்டும் வேண்டாம் நமக்கு."

என் திகைப்பு வாயை அடைத்துவிட்டது. முதலாளியா சொல்கிறார் இப்படி ! எந்த டெண்டரிலும்காண்ட்ராக்டிலும்லட்சக்கணக்காகப் பணம் சம்பாதித்து லட்சாதிபதியாகியிருக்கிறாரோ அந்த டெண்டரையும் காண்ட்ராக்டையுமா வேண்டாம் என்று மனதாரக் கூறுகிறார் ! என்ன வந்துவிட்டது இவருக்கு?

அவரையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தேன். அவர் சட்டென்று பேசினார்:

"என்னப்பா, அப்படிப் பார்க்கிறாய் ? என் திடீர் மாறுதல் உனக்கு ஆச்சரியமாக இருக்கிறதா ?.... ஆனால் எனக்குத் திருப்தியாக இருக்கிறது..... அந்தச் செருப்பு தைக்கிற கிழவன் எத்தனை பெரிய உண்மையை எவ்வளவு ஆழமாக என் மனத்தில் பதித்து விட்டான் பார்த்தாயா !... தன்னை நம்பி, தன்னிடம் ஒப்படைக்கப்பட்ட அற்பமான, செருப்பு தைக்கும் வேலையில் நேர்ந்துவிட்ட ஒரு சிறிய கலப்படத்தை எண்ணி எப்படியெல்லாம் துடிக்கிறான் அவன், எத்தனை பெரிய துரோகமாகக் கருதுகிறான் அதை. அதனால் கிடைக்கும் வருமானம் தன் உடலில் ஒட்டாது என்று உணர்கிறான்.... ஆனால் நான்.....? ஒவ்வொரு காண்ட்ராக்டிலும் எத்தனை பேருடைய நம்பிக்கைக்குத் துரோகம் செய்கிறேன்! ச்சே..... மிகவும் அற்பமானவன் நான்! கேடு கெட்டது என் வாழ்க்கை!... இந்த வாழ்க்கை வேண்டாம்.... வேண்டவே, வேண்டாம் எனக்கு."

முதலாளியின் குரல் அழுவது போலிருந்தது. முகத்தைத் தாழ்த்திக் கொண்டார் மிகுந்த வேதனையுடன்.

செயலற்று உட்கார்ந்திருந்தேன் நான்.

மக்கள் குலத்தின் துன்பங்களுக்கெல்லாம் காரணம் யாது என்பதைக் கண்டறிய, பெறற்கரும் இன்பங்களையும், பேரரச வாழ்வையும் துறந்து கானகம் சென்று கடுந்தவம் புரிந்த புத்தபிரான் 'ஞான போதம்' பெற உருவேலாவனத்திலுள்ள ஒரு போதிமர நிழல் தேவைப்பட்டது. அது போல, என் முதலாளியின் மனசாட்சி விழிப்படையக் கறுப்பன் செருப்புக் கடை வைத்திருக்கும் சாலையோரத்துப் புளியமரத்தடி தேவைப்பட்டது போலும் !

சென்னை செல்லும் பாதையில் காரைச் செலுத்திக் கொண்டிருந்தேன் நான்.

# மாற்றங்கள்

"ஸியாமி! நம்ப ரவியின் உபநயனத்துக்கு அருண் வருகிறானாம். கடிதம் போட்டிருக்கான். படிச்சுப் பார்" என்றதும்தான் அவள் தன் நினைவு அலைகளிலிருந்து விடுபட்டாள். 'அருண்! அவனைப் பார்த்து ஆறு ஏழு வருஷங்கள் ஆகியிருக்குமோ? இருக்கலாம். ஆனால், அப்படி இருக்காது என்று அவள் உள் மனம் சொல்லியது. எப்போதுமே அருணைப் பற்றி அவள் நினைத்தே வந்தாள். வளைந்து நிமிர்ந்த அந்தக் கூரிய நாசி. நெற்றிக்கு மேலே படிய வாரிவிடப்பட்ட கேசம். கன்னத்து ஓரங்களில் இறங்கி வரும் கிருதா. விஷமத்தனம் கொப்பளிக்கும் பார்வை.

அந்த அருண் ஸியாமியோடு பழகியபோது ஸியாமி இப்படி இந்த உருவத்தில் இல்லை. தளதளவென்று வளர்ந்து வரும் வாழைக் கன்றைப் போல் அப்படி ஒரு வளர்த்தி. புசுபுசுவென்று சிலிர்ப்பிக் கொண்டிருக்கும் குழலை வாரி ரிப்பன் போட்டு வெறுமனே முடித்திருப்பாள். அழகு சொட்டும் களையான முகத்தில் அலை பாயும் விழிகள். நறுக் நறுக்கென்று பேசும் வக்கணை வேறு. எங்கோ நாகபுரியிலிருக்கும் அருணும் ஸியாமியும் நண்பர்கள் ஆனதே பெரிய கதை. அந்த வருஷம் பத்தாவது பரீட்சை எழுதி முடித்துவிட்டுச் ஸியாமி தன் அத்தையின் வீட்டுக்கு நாகபுரிக்குக் கிளம்பினாள். சென்னையை விட்டே அவள் எங்கும் போனதில்லை. அகன்ற நதிகள், உயர்ந்த மரங்கள், மலைகள் இவைகளைத் தாண்டி ரயில் விரைந்தபோது கண் இமைக்காமல் ஜன்னல் கம்பிகளின் மீது முகம் புதைத்துப் பார்த்துக் கொண்டே சென்றாள்.

அப்படியே ஜன்னல் கம்பிகளின் மீது முகம் புதைத்துத் தூங்கியும் போனாள். ரயில் நாகபுரியை அடைந்தது. ரயில் நிலையத்தில் அருண் வந்திருந்தான். மிக எளிமையாக, வனப்போடு காணப்பட்டான் அவன். அத்தையின் பெண் ராது ரயிலிலிருந்து தாவி அவன் தோள்களில் உட்கார்ந்து கொண்டுவிட்டாள்.

"அருண்! வீட்டிலே எல்லா ஏற்பாடுகளும் பண்ணி விட்டாயா? இவ அப்பா ஊரில் இல்லையாமே. 'காம்ப்' எப்போ முடியப் போறது? இந்த வருஷம் இங்கே வெய்யில் அதிகமாமே?" அத்தை கேட்ட கேள்விகளுக்



கெல்லாம் அமைதியாகப் பதில் அளித்தான் அருண். இடையிடையே சியாமியை அவன் கவனித்தான். என்ன இருந்தாலும் தென்னிந்தியப் பெண்களுக்கு முகத்திலே ஓர் அலாதி வசீகரம் இருக்கத்தான் செய்கிறது என்று அவன் நினைத்திருக்க வேண்டும். அந்தப் புன்னகை அப்படி அவன் நினைப்பதைத் உணர்த்திக் கொண்டிருந்தது. டாக்ஸியில் வீட்டுக்குப் போகும்போது அத்தை அருணைப் பார்த்து, "அருண்! இவள்தான் என் அண்ணா பெண் சியாமி!" என்று அறிமுகம் செய்து வைத்து, "ஏண்டாப்பா, உன்னை இவளுக்கு யார் என்று சொல்வது?" என்று கேட்டாள்.

"எதை வேண்டுமானாலும் சொல்லுங்களேன். ஆண்டான், அடிமை, சேவகன் என்று எது வேண்டுமானாலும்." அருண் விஷமத்தனமாகச் சிரித்தான். அத்தையும் சிரித்தாள். "நல்ல அடிமை. நல்ல சேவகன். இவன் உன் அத்திம்பேரிடம் வேலை பார்க்கிறான். நம்ப பக்கம்தானாம். ஆனால், அப்பா அம்மா உறவுமுறை யாரும் இல்லாதவன்...."

சியாமி அவனை மிகுந்த அனுதாபத்துடன் பார்த்தாள்.

"ஓ! நோ... நோ... அப்பா அம்மா இல்லையா? நீங்களும் ஸாரும் எனக்குப் பின்னே என்ன உறவாம்?" என்று கேட்டுச் சிரித்தான் அவன்.

சியாமியும் அவனும் மனம் விட்டுப் பழகினார்கள், பேசினார்கள். அந்தத் தூய நட்பில் எவ்விதக் களங்கமும் இல்லை. சியாமி திரும்பவும் சென்னைக்குக் கிளம்பியபோது அருண் ஏக்கத்துடன் விடை கொடுத்தான் அவளுக்கு.

"சியாமி! ஊருக்குப் போனதும் என்னை மறந்துவிடாதே. ஒருவேளை உனக்குக் கல்யாணம் ஆகிக் கணவன் வீட்டுக்குப் போனாலும் என்னை மறந்து விடாதே.." என்று கேட்டுக் கொண்டான் அருண். சியாமி நீர் நிறைந்த விழிகளுடன் தலையசைத்து அவனிடம் விடைபெற்றுக் கொண்டாள்.

நாகபுரியிலிருந்து வந்த சியாமியின் வாழ்க்கையில் திடீரென்று மாறுதல் ஏற்பட்டது. பள்ளியில் அவசரமாக மாடிப் படிகளில் ஏறியவள் தடுக்கி விழுந்து மண்டையில் பலமாக அடிபட்டு ரத்த சேதத்தினால் சியாமியின் உடல் நலம் பெரிதும் பாதிக்கப்பட்டது. வெண்டைப் பிஞ்சுகளைப் போல் நீண்டிருந்த அவள் விரல்கள் குறுகிப் போய், கால்கள் நடக்க முடியாமல் படுக்கையில் கிடந்தாள் சியாமி. பல பிரார்த்தனைகள், வைத்தியம் என்று அவள் பெற்றோர் அலைந்த அலைச்சல் கொஞ்ச நஞ்சமல்ல. இடையில் அவள் அத்தை வந்து பார்த்து விட்டுப் போனாள். அவளிடம் அருணைப் பற்றிக் கேட்டிருக்கலாம். ஏதோ ஒன்று அவளைக் கேட்க விடாமல் தடுத்தது. அந்தச் சிரித்த முகம், கள்ளமற்ற பார்வை அவள் மனக் கண் முன்பு ஆறுதலாகத் தோன்றி மறையும். அத்தையே ஒரு நாள் பேச்சு வாக்கில் சொன்னாள். 'அருண்கூட ஊரில் இல்லை. வீட்டிலே போட்டது போட்டபடி வந்து விட்டேன். சீக்கிரம் கிளம்பணும்–" என்று. "அருண் எங்கே போயிருக்கான் அத்தை?" என்று அவள் இளமாக ஒரு நாள் கேட்டே விட்டாள்.

"அவனுக்கு வேலை ஒசந்து டில்லிக்கு மாத்தலாயிடுத்து. நானே அவனைப் பார்த்து வருஷத்துக்கு மேலாச்சு. ஆள் ரொம்ப மாறிப் போயிட்டானாம்..."

அன்று முழுதும் அவள் அருணையே நினைத்துக்கொண்டிருந்தாள்.

"அந்தப் பெண்ணுக்குத் திடீர் திடீர்னு பிரமை வந்துடறது. யாரோடும் பேசறதேயில்லை..." என்று அவள் அம்மா அலுத்துக் கொண்டாள். நினைவின் அலைகளில் அமுங்கிப் போகும்போது அதன் சுகம் அந்த லயிப்பில் இருப்பவர்களுக்குத்தானே புரியும்?

சியாமி சிரித்துக் கொண்டாள். எப்படியோ நவரக்கிழி அது இது என்று மலையாள வைத்தியத்துடன் ஸ்ரீ குருவாயூரப்பனுக்குத் துலாபாரம் கொடுத்து விட்டு வந்த பிறகு சியாமி மெதுவாக எழுந்து நடமாட ஆரம்பித்தாள்.

இருந்தாலும் அந்த அழகிய கைகள்? அவை பரபரவென்று கோலம் புனைந்த அழகும், மலர் தொடுத்த வக்கணையும் அவளுக்கு நினைவின் அலைகளாகப் போயின. சூம்பிப் போயிருந்த அந்தக் கரங்கள் இப்போது சிறு சிறு வேலைகளைச் செய்து கொண்டுதான் இருந்தன. ஓட்டமும், துள்ளலும் நிரம்பிய கால்கள் மெதுவாக நடந்தன. எதிலுமே ஒரு தேக்கம். கண்கள் எங்கோ, எதையோ எதிர் பார்த்துக் காத்திருந்தன.

தாயிடமும் பகிர்ந்துகொள்ள முடியாத ஓர் ஏக்கம் அவள் இதயத்தில் குடிபுகுந்தது.

ஒரு நாள் அப்பாவும் அம்மாவும் பேசிக் கொண்டிருந்தார்கள். "சியாமி இருக்கிற இருப்பில் அவள் கல்யாணத்தைப் பற்றி யோசனையே பண்ண முடியாது. நம்ப ராஜாவுக்காவது பூணூல் போட்டுவிடலாமே? அவனும் வளர்ந்துட்டான். இப்பப் போட்டால்தான் அழகாயிருக்கும்..." என்றாள் அம்மா.

பெற்றோருக்குத் தான் ஒரு பிரச்னையாக இருப்பதை அப்போதுதான் உணர்ந்தாள் சியாமி. அந்த நினைவில் அவள் லயித்திருந்த போதுதான் அவள் தாயார் அருண் வரப் போவதைக் குறித்து அவளிடம் தெரிவித்தாள்.

உபநயனம் சிறப்பாக நடைபெற்றது. உறவினர்கள், அவர்கள் வீட்டு வாலிபர்கள் எல்லோருமே அவளை ஏதோ ஒரு விந்தைப் பொருளைப் பார்ப்பதைப் போலப் பார்த்தார்கள். அந்தப் பார்வைகள்? அவற்றினின்று விடுபட்டுச் சியாமி தனிமையைத் தேடி அலைந்தாள்.

கொல்லைப்புறத்திலே மற்றவர்களின் பார்வையைத் தாண்டி இருந்த மாமரத்து நிழலில் அவள் சென்று அமர்ந்தபோது அங்கு ஏற்கெனவே அருண் வந்து உட்கார்ந்திருப்பதைக் கண்டாள். அவன்தான் எப்படி மாறிவிட்டான்? அவனிடம் முன்பிருந்த எளிமை, மென்மை, இரக்கம், எல்லாம்தான் மாறிவிட்டன. மனிதனிடம் நிலையாக எதுவுமே இருக்காது போலும் என்று அவள் நினைத்தவுடன் ஒரு கணம் இந்த மனிதப் பிறவியையே அவள் வெறுத்தாள். ஐந்தாறு வருடங்களில் ஒருவன் இப்படி மாறி விட்டான் என்றால்? அருணின் கையில் புகைந்துகொண்டிருந்த சிகரெட்டின் நுனி வெட்டாக மின்னியது. "சியாமி! உன்னோடு பேச வேண்டும்.

---

அதுவும் தனிமையில் பேச வேண்டும் என்று இரண்டு நாட்களாகக் காத்திருக்கிறேன்.''

''பேசலாமே!'' என்றாள் சியாமி.

''நீ இப்படியேதான் இருக்கப் போகிறாயா, என்ன?''

''பின்னே நான் பழையபடி எப்படி மாற முடியும்? இந்த மட்டும் நான் இருப்பதே ஆண்டவனின் கருணை...''

''நானும் ரொம்ப மாறிவிட்டேன் சியாமி! நாகபுரியை விட்டுக் கிளம்பிய பின் எக்கச்சக்கமான மாறுதல். வாழ்க்கையின் ஏற்றத்தில் இருந்ததால்தான் பள்ளத்தை நோக்கி என்னால் சடுதியில் இறங்க முடிந்தது. உண்மையைச் சொல்கிறேன், கேட்டுக்கொள்... நான் குடிக்கக் கூடக் குடிப்பேன், சியாமி. ஒருவேளை எனக்கும் காலாகாலத்தில் கல்யாணமாகி என்னை நேசிக்கவும் ஒருத்தி வந்திருந்தால் இப்படி மாறியிருக்க மாட்டேனோ என்னவோ—''

''அதனால் என்ன அருண்! உலகத்தில் பருவங்கள் மாறுவது போல் மனித வாழ்க்கையில் மாற்றங்கள் ஏற்படுவதுண்டு. அதைப் பற்றி நான் கவலைப்படவில்லை. முன்பு நீ பார்த்த சியாமியா நான் இப்போது? மாறிவிட்டேன் இல்லையா?''

''ஆமாம்... அந்தச் சியாமி எங்கே? அவள் என் உள்ளத்திலே நின்று என்னை ஓயாமல் படுத்திய பாடெல்லாம் எங்கே? நீ மாறிவிட்டாய் சியாமி!''

''அப்படியானால் இந்த இரண்டு மாற்றங்களும் ஒரு நன்மைக்காகத்தான் ஏற்பட்டிருக்க வேண்டும்...''

அருண் சியாமியை ஆவலுடன் பார்த்தான். அவள் குறிப்பிடும் அந்த நன்மையைப் பற்றி மேலும் என்ன சொல்லப் போகிறாள்? அந்த நன்மை... அருண் அவளை ஆசை ததும்பப் பார்த்துக் கொண்டிருந்தான்.

சியாமி மௌனமாகி விட்டாள். காற்றுக் கூட அங்கே மௌனமாகச் சியாமி பேசப் போவதைக் கேட்க நின்றிருந்தது. சில மணித் துளிகள் மௌனம் நீடித்தாலும் அவர்கள் இதயங்கள் பேசிக் கொண்டன. அருண் கீழே கிடந்த மாவிலைகளைக் கிள்ளிக்கொண்டிருந்தான். பச்சைப் பசேல் என்று அவை சற்று முன் அடித்த காற்றினால் கொத்துக் கொத்தாக விழுந்திருந்தன.

''மாவிலைக்கே தனி அழகு... கல்யாண வாசலாகட்டும், வேறு எந்த வைபவமாகட்டும், மாவிலைத் தோரணம் இல்லாமல் சிறப்புப் பெறுவதில்லை...'' என்றாள் சியாமி.

''ஆமாம்... நம் கல்யாணத்துக்கு இந்த மரத்து மாவிலைகளை ஒடித்தே தோரணம் கட்டவேண்டும்...'' அருண் இவ்விதம் கூறிவிட்டுத் திடுக்கிட்டு அவளை ஏறிட்டுப் பார்த்தான்.

சலனமற்றிருந்த சியாமியின் முகத்தில் விநாடியில் ஒரு மாற்றம் நிகழ்ந்தது. ஆம், அந்தி வானத்துச் செம்மை அவள் முகத்தில் இறங்கியிருந்தது!

# வட்டமேஜை

★ இக்குறிப்பிட்ட கடிதம் ரூ. 15/- பரிசு பெறுகிறது.

நான் சில தினங்களுக்குமுன் ஒரு திருமணத்துக்குச் சென்றிருந்தேன். திருமணத்தன்று மணமக்களுக்கு ஒரு வாழ்த்துத் தந்தி வந்தது. அதைப் பிரித்துப் பார்த்தால் அதில் **(Eight)** 'எட்டு' என்று மட்டுமே போட்டிருந்தது. அருகில் இருந்த சிலரை விசாரித்ததில் ஒவ்வோர் எண்ணுக்கும் ஒவ்வொரு மாதிரி வாழ்த்து உண்டு என்று கூறினார்கள். தபால் தந்தி அலுவலகத்தில் அந்த எண்ணுக்குள்ள வாழ்த்தை அனுப்பி யிருக்க வேண்டும். அதை அவர்கள் மறந்து விட்டு எண்ணை அப்படியே அனுப்பி விட்டார்கள்!

மீனம்பாக்கம்,
21–7–71 எஸ். ராகவன்

★ குறிப்பிட்ட பணிகளுக்காக என அமெரிக்க உதவி ஸ்தாபனத்தின் மூலம் பெற்ற நிதி உதவிகளை அந்த ஸ்தாபனம் போட்ட விதிமுறைகளின்படி ஒழுங்காக உரிய காலத்தில் பயன்படுத்தாமற் போனதால் நமது அரசுக்கு நஷ்டம் ஏற்பட்டு, அந்நியச் செலாவணியாக ரூபாய் 5 கோடியை முந்திய மூன்று ஆண்டுகளில் திருப்பித் தர நேரிட்டது. விதிமுறைகளுக்கு மாறாகப் பெற்ற உதவி என்ற காரணத்தால்தான் இந்த வாபஸ். இவ்வாபஸுக்கு உடந்தை அரசுதான். உலோகங்களின் இறக்குமதிக்கும் வியாபாரத்துக்குமாகச் சர்க்கார் நடத்தி வரும் ஒரு ஸ்தாபனம், உதவித் தொகையுடன் தாமிரத்தை இறக்குமதி செய்தது. அதைச் சாதாரண தொழில் துறைக்கு விற்காமல் ஆயுதத் தொழிற்சாலைக்குத் திருப்பி விட்டது. இம்முறைகேடான செயலால் 24 லட்சம் டாலர் வாபஸ் செய்ய வேண்டியதாயிற்று. ஒரு நீர்விசை நிலையத்துக்கு 91,000 ரூபாய் பெறுமான உருக்கை இறக்குமதி செய்தார்கள். துறைமுக அதிகாரிகளுடன் ஏற்பட்ட தகராறு காரணமாக மூன்று வருடங்கள் அது பம்பாயில் டெலிவரி ஆகாமல் துருப்பிடித்துக் கிடந்தது. மேலும் பல்வேறு ஆராய்ச்சிப் பணிகளுக்காக என்று அமெரிக்க உதவி பெறப்பட்டது (திட்டக் கமிஷனால்). உதவி பெற்ற 303 ஆராய்ச்சிப் பணிகளில் 177 சென்ற வருடம்கூட நிறைவு பெறாமல் இருந்தன. இவ்வளவுக்கும் காரணம் நம் அரசின் சுறுசுறுப்பற்ற, ஆய்வற்ற, முன்யோசனையற்ற திட்டங்கள்தாம். பிற நாடுகள் தரும் உதவிகளைக்கூட நம்மால் ஒழுங்காகப் பயன்படுத்திக் கொள்ள முடியவில்லையென்றால் நம் வளர்ச்சியை என்னென்பது? அரசுதான் என்ன செய்கிறது?

சென்னை-1
22–7–71 எம். ராமமூர்த்தி

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-31
Managing Editor T Sadasivam

ANNOUNCING!

The sale of

BLENDED AND FANCY FABRICS

made by mixing cotton and

GRASIM STAPLE FIBRE

from to-day at

AKASH-DEEP, SANDHURST BRIDGE, CHOWPATTY

- Attractive Fancy Dress material for ladies
- Immaculate Bush Shirtings for gents
- Decorative Tapestry and Curtain materials
- Priced cheaper than cotton fabrics



WALIOR RAYON SILK MFG. (WVG.) CO. LTD., BIRLAGRAM, NAGDA (M.P.)

